

# வெற்றி தலைக்கேறி விட்டதா என்ன அவருக்கு?

**ஃபரூக் எஞ்சினீயர் புன்னகை புரிகிறார்**

"நான் எதையும் தலைக்கேற விடுவதில்லை. ஆம். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமைத் தவிர வேறு எதையும் நான் தலைக்கேற விடுவதில்லை. ப்ரில்க்ரீம் என்னுடைய தலைமுடியை ஆரோக்கியமாக, நன்கு படிந்த நிலையில் வைத்திருக்கிறது. எப்படியிருக்க நான் விரும்புகிறேனோ அதுபோலவேதான்."

ப்ரில்க்ரீமில் இருக்கும் புரதம் மயிர்க்கால்களுக்கு வலுவூட்டி, தலைமுடிக்கு நல்ல ஊட்டம் அளிக்கிறது. ப்ரில்க்ரீமினால் கலையாத முடியுடன் மிடுக்காக நீங்கள் நாள் முழுவதும் விளங்கலாம். தவிர பிசுக்குத்தன்மையோ, ஒட்டிக்கொள்ளும் தன்மையோ அதற்குக் கிடையாது. அது முடியலங்காரத்திற்கோர் நவீன வழி.

ஃபரூக் மாதிரியே நீங்களும் புத்திசாலித்தனமானதைச் செய்யுங்கள்.

புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமை உபயோகியுங்கள்.




புரதம் நிறைந்த

**ப்ரில்க்ரீம்** அழகான முடிக்கு ஆரோக்கியமான வழி.

# சாதாரண மக்களும் வாங்கும் விலையில் கவர்ச்சியான பளபளப்பு அளிக்கும் ஒரே பெயிண்ட்



ஆயிரத்தில்
ஒன்று, பல்லாயிரம்பேர்
தேர்ந்தெடுக்கும் ஒன்று—
**ஏஷியன் பெயிண்ட்ஸ்**

AIYARS-AG2. 396 TM

பிரமாதீச, ஐப்பசி, 19 — நவம்பர் 4, 1973



# கல்கி

## பொருளடக்கம்



மேலட்டை :

புதுமை ஒளியும் புரிந்தாலும் - புரியுமா
பாவையின் புன்னகைக்குப் பொருள்?

வண்ணப்படம் : புஷ்பத்துறை சுப்பிரமணியம்.

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

உங்கள் குடும்பத்தினரின்
உடல்நலம் ஓங்கியிருக்க
அவசியம் அளியுங்கள் மிகச்
சிறந்ததையே

# அவர்களுக்கு விவா கொடுங்கள்.




விவா நூதன உணவு தொழில் நுட்பத்திறமையில் உருவானது. இதில் மற்ற ஆரோக்கிய உணவுப் பானங்களில் உள்ளதைப்போன்று தூய்மையான, முழுமை பெற்ற ஆடைப்பாலும் பார்லி மால்ட்டும் உள்ளன. ஆயினும் விவாவில் மட்டுமே கோதுமை மால்ட் அடங்கியுள்ளது.

கோதுமை மால்ட் எதற்கு?

எதற்கெனில், அதில் வளமைமிக்க கார்போஹைட்ரேட், புரதங்கள், விடமின்கள் மற்றும் கனிஜ சத்துக்கள் எளிதில் சீரணிக்கும் வகையில் சேர்க்கப்பட்டுள்ளன.

கோதுமை மால்ட் கலந்திருப்பதால் விவா அதிக அளவு ஊட்டச்சத்து உள்ளதாய், பூரணமான இன்சுவையோடு, வளமிக்க பொன்னிறம் கொண்டு, உடனடியாகக் கரையும் தன்மையோடு விளங்குகிறது.

ஆகவே, உங்கள் அன்றாட உணவிலுள்ள பற்றாக்குறைகளை ஈடுசெய்ய சரியான, போதுமான ஊட்டச் சத்து அளிக்கவேண்டுமென்றால் அதற்கு விவா போல வேறு எதுவும் சிறந்ததல்ல

மிகச் சிறந்ததையே தேர்ந்தெடுக்க இதோ அரியதொரு வாய்ப்பு.

விவாவையே தேர்ந்தெடுங்கள்.

ASP/JIL-V-IA/73 TAM





இந்தியாவில் தயாரிப்போர்,
ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

# விவா

உற்சாகமான ஆரோக்கிய வளர்ச்சிக்கு தினமும் விவா.

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா --பாரதியார்



மலர் 33 -- இதழ் 14

# பிரிவினை என்ற விஷ வித்து!

"இந்தியா இந்தியருக்கே; தமிழ் நாடு தமிழருக்கே'' என்ற கோஷம் எழுப்பப்பட்டதிலிருந்து தமிழர்கள் தி. மு. க. அரசைச் சந்தேகிக்கத் தொடங்கி விட்டனர். இது பிரிவினை வாதமா இல்லையா என்பது பற்றி அவ்வப்போது பேசப்படும் பேச்சுக்களும் கொடுக்கப்படும் விளக்கங்களும் சந்தேகத்தை அதிகரிக்க உதவுகின்றனவே தவிர குறைக்கவில்லை.

பிரிவினைக் கோரிக்கை ஒரு காலத்தில் ஆளும் கட்சியின் கோட்பாடுகளில் ஒன்றாக இருந்தாலும், அறிஞர் அண்ணாவின் இறுதி ஆண்டுகளில் இது கைவிடப்பட்டது என்று ஒரு பகுதியினர் அடிக்கடி எடுத்துக்காட்டுகின்றனர். கைவிடப்படவில்லை; நிறுத்தி வைக்கப்பட்டதுதான், அவசியமானால் புத்துயிர் பெறும் என்று பேசப்படுவதையும் கேட்கிறோம்.

தி. மு. க. கோருவது பிரிவினை அல்ல; மாநில சுயாட்சிதான் என்று மேலும் ஒரு விளக்கம் சில சமயம் கொடுக்கப்படுகிறது. மாநில அரசுக்குப் போதிய அதிகாரங்கள் இல்லாததால் மக்களுடைய முன்னேற்றத்துக்கு அனுகுணமான திட்டங்களைத் தீட்டி அமுல் நடத்த முடியவில்லை; சுயாட்சி கிடைத்து விட்டால் வேண்டிய திட்டங்களை எளிதில் தீட்டிக் கொள்ளலாம் என்பது மாநில சுயாட்சிக் கோரிக்கைக்குக் கூறப்படும் காரணம்.

மாநில அரசுக்குக் கிடைக்கும் நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்ள வழி இல்லாததாலேயே பிரிவினை, மாநில சுயாட்சி என்றெல்லாம் பேச வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது என்றும் சில சமயம் கூறப்படுகிறது.

நிதிக் கமிஷன் ஐந்தாண்டுக்கு ஒரு முறை நியமிக்கப்படுகிறது. இது மத்திய — மாநில நிதிப் பங்கீடுகளைப் பரிசீலனை செய்து, அதிக வருவாயை மாநிலங்களுக்கு அளிக்க வழி செய்கிறது. அரசியல் அமைப்பில் செய்யப்பட்டுள்ள இந்த ஏற்பாடு திருப்திகரமாகவே இயங்கிக் கொண்டு வருகின்ற போது, மாநில — மத்திய அரசுச் சண்டையில், நிதிப் பிரச்னையை ஓர் ஆயுதமாகச் சமயம் நேரும்போதெல்லாம் இந்த அரசு உபயோகித்து வருவதானது அதன் உள் நோக்கங்களைச் சந்தேகிக்க வைக்கிறது. ராஜமன்னார் கமிட்டி அறிக்கைகூட, பிரிவினை விவாதங்களில் ஆயுதமாக அடிக்கடி கையாளப்படுவதைப் பார்க்கலாம். அகில இந்திய ரீதியில் இக்கமிட்டியின் அறிக்கைகளும் சிபாரிசுகளும் விவாதிக்கப்பட வேண்டும் என்று பேசப்பட்டதுகூடப் பிரிவினைக்கு அடிப்படைதான் என்ற கருத்து நிலவுகிறது.

திரு ஈ. வெ. ரா. பிரிவினையைக் கைவிடாது இன்னமும் பற்றிக்கொண்டிருக்கிறார். பிரிவினைக் கோரிக்கை ஆளும் கட்சியினரின் கொள்கை அல்ல என்று கூறிக் கொண்டே பிரிவினைப் பிரசாரம் நடக்கும் திராவிடக் கழகக் கூட்டங்களில் ஆளும் கட்சி அமைச்சர்களும் கலந்து கொள்கிறார்களே, இதைக் குறித்தும் மக்களிடையே ஐயப்பாடு எழத்தான் செய்கிறது.

பல்வேறு சந்தர்ப்பங்களில், பல்வேறு விதங்களில் சமயத்துக்கு ஏற்றபடி கேட்கப்படும் பேச்சுக்களிலும், விளக்கங்களிலும் சமத்காரமும் சாதுர்யமும் தான் தெரிகின்றனவே தவிர, தி.மு.க. அரசின் முடிவான கருத்து என்ன என்பது விளங்குவதில்லை. இதனாலெல்லாம் ஆளும் கட்சி பிரிவினையைக் கோருவதையும் அடைவதையுமே குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது என்ற எண்ணம்தான் பரவலாக மக்கள் மனத்தே தோன்றியிருக்கிறது.

பொதுவாக படித்த மக்கள்தாம் ஒவ்வொரு பிரச்னையையும் அலசி ஆராய்ந்து பார்த்து அதிலுள்ள நல்லது கெட்டதுகளைச் சீர்தூக்கி 'ஆகவே இதில் நன்மையும் உண்டு, தீமையும் உண்டு' என்று கூறித் தங்களையும் குழப்பிப் பிறரையும் குழப்பத்தில் ஆழ்த்துவார்கள். ஆனால் அடிப்படையான சில முக்கிய விஷயங்களில் சாமானிய மக்கள் கொண்டுள்ள கருத்துக்கள் ஆணித்தரமானதாகவும் சரியானதாகவும் இருக்கும். ஒரே குரலாக, மகேசன் குரலாக

ஐயம் திரிபின்றி ஒலிக்கும். அரசாங்கத்திடம் நேர்மை குன்றி விட்டது; எதேச்சாதிகாரப் போக்கு வலுத்து விட்டது; வேண்டியவர்களுக்குச் சலுகை காட்டப்படுகிறது; மதுவிலக்கு வேண்டும் என்றெல்லாம் மக்கள் கருத்து தெரிவிக்கும் போது ஜனங்களின் சாமானிய அறிவு தான் செயல்படுகிறது. சிக்கலான சில அரசியல் பொருளாதார விஷயங்கள் அவர்களுக்குப் புரியாமல் போகலாம். ஆனால் விலைவாசி உயர்வு, பிரிவினை வாதம் போன்ற அடிப்படை விஷயங்களில் அவர்கள் அழுத்தமான, ஒருமுகமான கருத்து கொண்டிருப்பார்கள். எவ்வளவுதான் சமத்காரமாகப் பேசினாலும், பிரிவினையை வளர்ப்பதுதான் இன்றைய ஆளும் கட்சியின் லட்சியம் என்ற கருத்து மக்கள் மனத்தில் வேரூன்றியிருக்கிறது. சாதுர்யப் பேச்சுக்கள் அங்கே எடுபடாது.

பிரிவினை கோருவதும் அதற்காகப் பிரசாரம் செய்வதும் பிரசாரம் செய்பவர்களுக்கு ஊக்கம் அளிப்பதும் நாட்டின் ஒற்றுமையைக் குலைப்பதாகும்; இது விரும்பத்தக்கதல்ல என்பதைத் தமிழக மக்கள் உணர்ந்து விழிப்புடன்தான் இருக்கிறார்கள். ஊன்றப்பட்டுள்ள இந்த விஷ வித்து முளைவிடு முன்பே அதைத் தோண்டி எடுத்து அழித்து விடவும் தயாராய் உள்ளார்கள்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## இருபத்தையாயிரம் ரூபாயும் இரண்டு எம். எல். ஏ.க்களும்

"என்னிடம் ரூபாய் இருபத்தையாயிரம் இருக்குமானால் அதை வைத்து இரண்டு எம்.எல்.ஏ.க்களை வாங்கி விடுவேன்" என்று எம்.ஜி. ஆர். பேசியதாகப் பத்திரிகைகளில் வெளியான ஒரு பேச்சைக் கண்டித்து முன்னாள் முதலமைச்சர் திரு பக்தவத்ஸலம் கூறியிருக்கிறார். இப்படிப் பேசியிருப்பதற்காகச் சட்டசபை உறுப்பினர்கள் எம்.ஜி.ஆர். மீது உரிமைப் பிரச்னைகூடக் கொண்டு வந்தாலும் வரலாம் என்று திரு பக்தவத்ஸலம் சொல்லியிருக்கிறார்.

"இம்மாதிரி அவர் பேசியிருப்பதை ஒட்டி இப்போது இரண்டு பிரச்னைகள் எழுகின்றன. ஒன்று தம்மிடம் பணம் இருந்தால் இப்படிப்பட்ட மோசமான காரியங்களைச் செய்ய எம். ஜி. ஆர். தயாராக இருக்கிறார் என்பதை அவரே பகிரங்கமாக ஒப்புக் கொண்டதாக முடிகிறது. இன்னொன்று சட்டசபை உறுப்பினர்களைப் பணம் கொடுத்து வாங்கிவிட முடியும் என்று அவர் நினைப்பதை இந்தப் பேச்சின் மூலம் நிரூபிக்கிறார். இது சட்டசபையின் மற்ற உறுப்பினர்களை அவமதிப்பதாக இருப்பதால் அவர்கள் அனைவரும் சேர்ந்து எம்.ஜி.ஆர். மேல் உரிமைப் பிரச்னை கொண்டு வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை" என்பது பக்தவத்ஸலம் அவர்களின் கருத்துச் சுருக்கமாகும்.

## சிறையில் இருக்கும்போதே ஜப்தி

ஸ்தாபன காங்கிரஸ் தமிழ் நாட்டில் நடத்திய அறப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறையில் இருந்த சமயம் பார்த்து விவசாயிகள் இருவருடைய சொத்துக்களை அரசாங்கம் ஜப்தி செய்துவிட்டதாகத் தெரிகிறது. இந்தச் சம்பவம் தென்னார்க்காடு மாவட்டம் செஞ்சி தாலுகாவில் நடந்திருக்கிறது. உள்ளூர் தி. மு. க. பிரமுகர் ஒருவர் சொந்த விரோதத்துக்குப் பழி வாங்குவதற்காக இந்த நேரத்தைப் பயன்படுத்தி இதற்குத் தூண்டினார் என்று சொல்கிறார்கள்.

மேற்படி இருவரும் தமிழக அரசிடம் எப்போதோ பெற்றிருந்த விவசாயக் கடனைத் திருப்பித் தரவில்லை என்பதற்காக உழவு மாடுகள், வண்டிகள், கலப்பைகள் ஆகியவற்றை ஜப்தி செய்து விட்டார்களாம். கலப்பையை ஜப்தி செய்துவிட்டு அப்புறம் 'பசுமைப் புரட்சிக்கு உதவுவது இந்த அரசே' என்று பெருமையாக மேடையில் சொல்லிக் கொள்ளலாம் பாருங்கள், அதற்காகத்தான் இப்படிச் செய்தார்களோ, என்னவோ? அதுவும் சம்பந்தப்பட்ட இருவரும் நாடே வியந்து கொண்டாடிய ஒரு சாத்துவிகப் போராட்டத்தில் கலந்துகொண்டு சிறை திரும்புமுன் இந்த ஜப்தி நடந்திருக்கிறது. "எந்தவிவசாயிகளிடமும் நிர்ப்பந்தப்படுத்திக் கடனை வசூலிக்கலாகாது" என்று ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணும் தலைவர்கள் வாய்க்கு வாய் மேடைகளில், பேசிக் கொண்டு தான் இருக்கிறார்கள். 'படிப்பது இராமாயணம் – இடிப்பது பெருமாள் கோயில்' என்கிற தோரணையில் காரியங்கள் நடப்பதற்கு இதுவே ஒரு சரியான உதாரணம்.

## தனித் தமிழ் நாடு நாடகம்

பிரிவினைவாதிகளைப் பற்றியும், தமிழ் நாட்டில் அதற்கு முயல்வோர், தூண்டுவோர், ஆதரிப்போர் பற்றியும் பாரதப் பிரதமர் இந்திராகாந்தி வெளிப்படையாகக் கண்டிக்கத் தொடங்கியிருக்கிறார். அதன் விளைவு 'தனித் தமிழ்நாடு' நாடக மேடையில் காட்சிகள் மாறுகின்றன. பேசிய வசனங்களுக்குப் புதுவித அர்த்தங்கள் கூறப்படுகின்றன.

"மாநில சுயாட்சின்னு இவங்க கேட்கிறது சட்டத்துக்குப் பயந்துதான். 'தனித் தமிழ் நாடு'ன்னு கேட்க முடியாமே பிரிவினைத்







துருப்பிடிக்காமல்
இருக்க...






தடைச் சட்டம் குறுக்கிடுறதாலே, 'மாநில சுயாட்சி' வேணும்னு கேட்கிறோங்க'' என்று சமீபத்தில் ஒரு பத்திரிகைக்குப் பேட்டியளித்துள்ள ஈ.வெ.ரா இப்போது திடீரென்று தி.மு.க.வைக் காப்பாற்ற எண்ணியோ என்னவோ, ''திராவிடக் கழகத்தின் தனித் தமிழ் நாடு கோரிக்கையில் தி.மு.க.வுக்கு எவ்விதத் தொடர்பும் இல்லை. இந்தக் கோரிக்கைக்காகத் தி.மு.க.விடமிருந்து எவ்வித ஆதரவையும் திராவிடக் கழகம் எதிர்பார்க்கவில்லை. திராவிடக் கழகத்தின் 'தனித் தமிழ் நாடு' கோரிக்கையைக் கருணாநிதியும் ஆதரிப்பதாகப் பிரதமர் இந்திராகாந்தி கூறுவது சரியில்லை'' என்று மாற்றிக் கூறியுள்ளார். உ. பி. பயணத்தை முடித்துக் கொண்டு திரு கருணாநிதி ஈ.வெ.ராவைச் சந்தித்ததன் விளைவாகக் கருணாநிதியைக் காப்பாற்ற இந்த அறிக்கையை ஈ.வெ.ரா. விட்டிருக்கலாம் என்று தெரிகிறது. ஆனால் அதே ஈ.வெ.ரா. கல்பாக்கத்திலே ஒரு கூட்டத்தில் பேசும்போது, ''நம்ம மந்திரிங்க வழவழா கொழ கொழான்னு இருக்காங்க. நாங்க அவங்களுக்குச் சொல்றோம். நீங்க தனி நாடு போராட்டத்துக்கோ, வெங்காயத்துக்கோ வரவே வேணும். அதுக்காகன்னு மந்திரி பதவியை விட்டுடாதீங்க. நீங்க பதவியிலே இருந்துக்குங்க. நீங்க போயிட்டீங்கன்னு அதைவிட மோசமானவனுகதான் வருவாங்க. வந்தா நீங்க செஞ்சதையெல்லாம் கெடுத்துப்புடுவாங்க. அதுனாலே நீங்க ஒதுங்கியே இருக்கலாம்'' என்று கூறியிருப்பதையும் கவனிக்க வேண்டும்.

## நேரு படம் நீக்கப்படுகிறது

'தி.மு.க. ஆட்சியில், நீண்ட நாட்களுக்கு முன் அரசு அலுவலகங்களில் வைக்கப்பட்டிருந்த நேரு படங்கள் நைஸாக அகற்றப்படுகின்றன. பொள்ளாச்சிக்கு அருகே பரம்பிக் குளம் ஆளியாறு திட்ட அலுவலகத்தில் இருந்த நேரு படம் அகற்றப்பட்டுவிட்டதாக நான் கோவை சென்றிருந்தபோது, அங்கே நண்பர்கள் என்னிடம் வருத்தப்பட்டார்கள். காந்தி, நேரு, போன்ற தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவர்களின் படங்களை நீக்கிவிட்டுத் தங்கள் படங்களே இடம் பெறச் செய்வதற்குத் தி.மு.க.வினர் முயன்று வருகிறார்கள். இன்னும் காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் திட்டமிட்டு நிறைவேற்றப்பட்ட கல்வி நிலையங்கள், அலுவலகங்கள் இவற்றின் அஸ்திவாரக் கற்களில் அன்றைய அமைச்சர்களின் பெயர்கள் இருக்கின்றன என்ற காரணத்தினால் அவற்றை அகற்றுவதிலும் தீவிரம் காட்டி வருகிறார்கள். கோவை மாவட்டத்தில் பல இடங்களில் இப்படி 'அஸ்திவாரக் கற்களை ஏற்கனவே அகற்றியாயிற்று. கற்களை அகற்றுவதன் மூலம் சாதனைகளை மறைத்துவிட முடியாது. 'அற்பனுக்குப் பவிசு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்' என்பதையே இது காட்டுகிறது'' என்று திரு பக்தவத்ஸலம் வருத்தப்பட்டுத் தெரிவித்திருக்கிறார்.

## யார் நிரந்தரம் ?

ஆந்திர மேலவை சபாவில் நடைபெற்ற ஒரு விழாவில் முதலில் பேசிய தமிழக கவர்னர் திரு கே.கே. ஷா, ''மந்திரி பதவி தாற்காலிகமானது'' என்று ஒரு வாக்கியத்தைக் கூறினாலும் கூறினார், அவரை அடுத்து அதே விழாவில் பேசிய தமிழக முதல்வர் திரு கருணாநிதி, ''நாங்கள் தாற்காலிகமாக இருக்கலாம். ஆனால் மந்திரிப் பதவி என்பது நிரந்தரமானது. இதே போல் ஆளுநர் பதவிக்குத் திரு ஷா தற்காலிகமானவராக இருக்கலாம். ஆனால் ஆளுநர் பதவி என்பது நிரந்தரமானது'' என்று பதிலுக்கு விளாசியிருக்கிறார். பாதி விழாவில் ரயிலுக்குப் போக

## ராஜாஜி சிந்தனை

சூரிய வெளிச்சத்தின் மூலம் நம்மால் சூரியனைக் காண முடிகிறது. காற்றிலே அலையலையாக மிதந்து வரும் சப்த அலைகளைக்கொண்டு இடி முழக்கத்தை உணர்கிறோம். தொட்டு உணர முடியாத ஒன்றை ஒளி அல்லது ஒலி அல்லது வாசனை மூலமே நமது புலன்கள் அறிந்து கொள்ள முடியும். கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார் என்பதை நம்மில் பெரும்பாலோர் ஒப்புக் கொள்கிறோம். ஆயினும் நாம் யாரும் புலன்களால் கடவுளை உணர்ந்தவர்கள் அல்ல. நாம் சிந்திக்கிறோம் அல்லது கடவுளைப் பற்றிய தத்துவங்களை நம்பி ஏற்றுக் கொள்கிறோம். சூரியன் ஒளிக் கதிர்களைப் பரப்புகிறது. ஆலய மணி ஒலிக்கும்போது சப்த அலைகளைப் பரப்புகிறது. அதுபோல் கடவுள் ஏதேனும் செய்யவில்லையா ? அவர் செய்கிறார் என்றுதான் நான் எண்ணுகிறேன். அன்புதான் அவர் பரப்பும் ஒளிக் கதிர்கள். தாயின் பரிவு, காதலர் களிப்பு, புன்னகையின் பூரிப்பு, சாந்தத்தின் சக்தி ஆகிய இவையனைத்துமே கடவுள் பரப்பும் ஒளிக்கதிர்களேயன்றி வேறல்ல. நீக்கமற நிறைந்திருக்கும் அவர் எங்கும் தமது அருளொளியை வீசுகிறார். அந்த ஒளி எங்கிருந்து வருகிறது என்பதை அறியாமலேயே அதை நாம் அனுபவித்து மகிழ்கிறோம். அது எந்தப் பொருளால் ஆனது என்பதும் நமக்குத் தெரியாது.

## ஜனாதிபதியின் உரிமை










ஜனநாயக உரிமை









வேண்டியிருந்த கவர்னர், போகும்போது, ''நான் தாற்காலிக கவர்னர்தானே, போய் வருகிறேன்'' என்று ஒரு போடு போட்டு விட்டுப் போயிருக்கிறார்.

ஏதோ விழாவுக்கு வந்திருந்தவர்களைச் சிரிக்க வைப்பதற்காக இப்படி வியாக்கியானங்கள் செய்யப்பட்டிருந்தால் சரி, ஆட்சேபமில்லை. பணம் காசு எதுவும் சாசுவதமில்லை என்கிறோமே அதற்கு என்ன அர்த்தம்? அவற்றை வைத்திருப்பவரிடம் அது நிரந்தரமாகத் தங்காது என்றும் அவற்றை வைத்திருப்பவரின் உயிர் சாசுவதமில்லை என்றும்தானே அர்த்தம்? அது போல் மந்திரி பதவி தாற்காலிகமானது என்று கவர்னர் ஷா குறிப்பிட்டபோது அந்தப் பதவியில் உள்ளவருக்கு அது தாற்காலிகமானது என்ற அர்த்தத்தில்தான் சொன்னார் என்பது நிஜமாகவே முதல்வருக்குப் புரியாது போனாலும் அங்கே குழுமியிருந்த மற்ற எல்லோருக்கும் நிச்சயம் புரிந்திருக்கும்.

## டி. டி. கே. கருத்துக்கள்

இந்த அக்டோபர் மாத மூன்றாவது வாரத்தில் ஸ்தாபன காங்கிரஸ் தலைவரான திரு காமராஜ் அவர்களையும் அருகில் வைத்துக் கொண்டு முன்னாள் மத்திய நிதியமைச்சர் ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் பத்திரிகைகளுக்குக் கூறிய கருத்துக்கள் மிகப் பெரிய அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் கருதப்படுகின்றன. அந்தக் கருத்துக்கள் நாட்டு நலனில் அக்கறையுள்ள அனைவரின் கவனத்தையும் கவர்ந்திருக்கின்றன.

''காங்கிரஸ் பிரிந்துவிட்டது என்று கூறிக் கொண்டிருந்தாலும், மிகுந்த பலத்தோடும், நம்பிக்கையோடும் இருக்கிற ஒரே அமைப்பாக மக்கள் இன்னும் அதைத்தான் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். பெரும்பான்மையான காங்கிரஸ்காரர்களும் அப்படியே நினைக்கிறார்கள். மகாத்மா காந்தி உருவாக்கிய இந்திய தேசிய காங்கிரசை யாரும் பிரித்துவிடவும் முடியாது, அழித்துவிடவும் முடியாது. இரண்டு காங்கிரஸ் கட்சிகளின் கொள்கையும் இலட்சியமும் ஒன்றுதான். சில தலைவர்களிடையேதான் வேறுபாடு இருக்கிறது. இளம் தலைமுறையினர் ஒன்று சேர்ந்து கிளர்ந்து எழுந்து எதிரெதிராக இருக்கக் கூடிய தலைவர்களையெல்லாம் ஒன்றுபடுத்தி வைப்பார்கள். சமீபத்தில் தமிழ்நாட்டில் ஸ்தாபன காங்கிரஸ் நடத்திய அறப் போராட்டம் மிகவும் அமைதியான முறையில் காந்திய வழியில் சிறப்பாக நடைபெற்றிருக்கிறது. காந்தியத்தின் ஒரே வாரிசான காமராஜரின் தொண்டர்கள் எல்லோரும் காந்திக் குல்லாய் அணிந்து கொண்டும், ராட்டைச் சின்னமுள்ள மூவண்ணக் கொடியை ஏந்திக் கொண்டும் நடத்திய அமைதிப் போர் படுத்த படுக்கையாக இருக்கும் நோயாளியான என்னையே உத்வேகத்தோடும், ஆர்வத்தோடும் செயல்படத் தூண்டிவிட்டுவிட்டது. தமிழ்நாட்டில் இப்போது நடைபெற்றது போன்ற சத்தியாக்கிரகப் போர் நாடு முழுதும் நல்ல காரியங்களுக்காக நடத்தப்பட வேண்டும்'' என்று ஸ்ரீ டி. டி. கே. மனம் திறந்து பேசியிருக்கிறார்.

## இசை மேதை மறைவு



பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்களின் மறைவில் சங்கீத உலகம் ஒரு ஜாம்பவானை இழந்துவிட்டது. கர்நாடக இசையில் அபாரமான புலமை பெற்றவர். மேற்கத்திய சங்கீதத்தில் தேர்ந்த பரிச்சயம் கொண்டிருந்தவராகையால், நமது சங்கீதத்தை நொடேஷனில் வடிப்பதற்கும், ஆர்க்கெஸ்ட்ரேஷன் எனப்படும் கோஷ்டி கானத்துக்கு நம் இசையை உகந்ததாக அமைப்பதற்கும் அளப்பரும் உதவி புரிந்தவர் ஸ்ரீ சாம்பமூர்த்தி அவர்கள். கர்நாடக இசைக்கான ஆரம்ப நூல்களிலிருந்து பட்டப் படிப்பு வரையில் உள்ள பாடப் புத்தகங்களை இயற்றி அருந்தொண்டு புரிந்திருக்கிறார். கர்நாடக சங்கீதம், கர்நாடக இசைப் பெரியார்கள் ஆகியோரைப் பற்றி அவர் எழுதியுள்ள நூல்கள் கலைக் களஞ்சியங்களாக மதிக்கத் தக்கவை. சிறந்த ஆராய்ச்சி அறிவு பெற்றிருந்ததோடு, தியாகராஜரின் சிஷ்ய பரம்பரையிடமே பாடாந்தரங்களைக் கற்ற பெருமையும் அவருக்கு உண்டு. பத்மபூஷண், சங்கீதவாருதி முதலிய விருதுகளைப் பெற்ற விற்பன்னர் அவர். ஸ்ரீ சாம்பமூர்த்தி அவர்கள் புரிந்துள்ள சீரிய கலைப் பணி எந்நாளும் அழியாமல் அமரமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.




# காமாக்ஷி



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்

ஒரு காரியமும் இல்லாமல், தன்னைத் தானே அநுபவித்துக் கொண்டிருக்கிற பிரம்மத்தையே சிவன், சிவம் என்று சொல்கிறோம். காரியமில்லாமல், ரூபமில்லாமல், வர்ணமில்லாமல், குணமில்லாமல் இருக்கிற அந்தச் சாந்த மயமான பிரம்மத்திலிருந்துதான் இத்தனை காரியங்கள், ரூபங்கள், வர்ணங்கள், குணங்கள் எல்லாம் உண்டாகியிருக்கின்றன. மாயா சக்தியினால் ஒரே பிரம்மம் இத்தனை உருவங்களும் குணங்களும் உள்ள பிரபஞ்சங்களாகவும், ஜீவராசிகளாகவும் தோன்றியிருக்கிறது. ஒன்றான பிரம்மத்தைப் பலவான பிரபஞ்சமாகக் காட்டுகிற அந்த மாயா சக்தியைத்தான் அம்பாள், அம்பாள் என்று சொல்கிறோம். இந்தச் சக்தியினால்தான் நாம் எல்லாம் தோன்றியிருக்கிறோம். உண்மையில் நாமும் பிரம்மத்தைத் தவிர வேறு இல்லை. ஆனால் வேறாக நினைக்கிறோம். இதற்குக் காரணம் பிரம்ம சக்தியான அம்பாளின் மாயைதான். இப்படி நம்மை மாயையில் போட்டு எடுப்பது அவளுடைய லீலை. ஆனால் அவள் மாயையில் நம்மைக் கட்டிப் போடுகிறவள் மட்டும் அல்ல. மனமுருகி அவளை எந்நாளும் பிரார்த்தித்துக் கொண்டேயிருந்தால் அவளே இந்த மாயை முழுவதையும் நீக்கி, நமக்குப் பிரம்ம ஞானத்தை அநுக்கிரகம் செய்வாள்.

ஞானம் பெறுவதற்கு சாட்சாத் அம்பாளைத் தவிர வேறு கதி இல்லை. அவள்தான் மாயையால் ஒரே பிரம்மத்தை மறைத்துப் பலவேறான பிரபஞ்சமாகக் காட்டுகிறாள். இந்தப் பிரபஞ்ச ஆட்டத்திலிருந்து விடுதலை பெற்று, சம்சாரத்திலிருந்து — ஜனன மரணச் சூழலிலிருந்து — விமோசனம் அடைந்து பிரம்மமாகவே நாம் ஆக வேண்டும் என்றால், எவள் இந்த மாயையைச் செய்தாளோ, அவளுடைய அநுக்கிரகம் ஒன்றினால்தான் முடியும். மாயாசக்தியாக இருக்கிற அம்பாளே தான் ஞானாம்பிகையாக நமக்கு மோக்ஷத்தை அநுக்கிரகம் செய்கிறவளும் ஆவாள்.

'மாயா' என்றால் 'எது இல்லையோ அது' என்று அர்த்தம். இல்லாத வஸ்து எப்படி இத்தனை ஆட்டம் ஆட்டி வைக்கிறது? அது எப்போதுமே இல்லாதது அல்ல; எப்போதுமே இருக்கிறதும் அல்ல. ஞானம் வருகிற வரையில் மாயை இருக்கிறது. அது வரையில் நானாவிதமான வஸ்துக்களைப் பார்த்து, எல்லாம் தனித்தனியாக உண்மையாக இருப்பதாக நினைக்கிறோம். அவற்றிடம் ஆசை, துவேஷம் முதலியவற்றை உண்டாக்கிக் கொண்டு பலவிதங்களில் கர்மம் செய்கிறோம். இந்தக் கர்மத்தை அநுபவிக்க மறுபடியும் மறுபடியும் செத்துச் செத்துப் பிறக்கிறோம். அம்பாளை உபாசித்து ஞானம் வந்து விட்டால், நானாவிதமான இத்தனையும் ஒரே பேரறிவின் வேறு வேறு தோற்றங்கள்தான் என்று அநுபவபூர்வமாகத் தெரியும். மாறிக் கொண்டும், அழிந்து கொண்டும் இருக்கும் இந்தத் தோற்றங்களில் ஆசை, துவேஷம் எதுவும் ஏற்படாது; இதற்கெல்லாம் ஆதாரமாக எப்போதும் மாறாமலே இருக்கிற பேரறிவோடு அறிவாக நம் மனத்தைக் கரைத்துவிடுவோம். அப்போது பிரபஞ்சமே நம் பார்வைக்கு இல்லாமல் போகிறது. எது இல்லாமல் போகிறதோ அது — அதாவது மாயை தான் இதுவரை நம்மை ஆட்டி வைத்தது என்று தெரியும்.

மாயைக்குக் காரணமான பிரம்மசக்தியான அம்பாள்தான் ஞானமும் தருகிறாள். அவளுடைய கருணையே இதற்குக் காரணம். இத்தனை மாயையைச் செய்தாலும், அதிலிருந்து விடுவிக்கிற கருணையும் அவளுக்கே பூரணமாக இருக்கிறது. மாயா லோகத்தில் நாம் உண்டாக்கிக் கொள்ளும் கஷ்டங்களுக்கும் துக்கங்களுக்கும் காரணம் நம்முடைய இந்திரியங்களும், மனசும்தான். இந்திரிய சுகங்களின் வழியிலேயே மனத்தைச் செலுத்தி நம்முடைய ஸ்வபாவமான ஆத்ம சுகத்தை மறந்திருக்கிறோம். ஐம்புலன்களும் மனமும் நம்மை ஆட்டிப் படைக்கின்றன. இவற்றைச் செய்தவள் மாயை. அவளே இவற்றைச் சுத்தப்படுத்தி, இந்திரிய விகாரங்களிலிருந்தும், மனசின் ஓயாத சஞ்சலங்களிலிருந்தும் ஜீவனை விடுவிப்பதற்காக சாட்சாத் காமாக்ஷியாக வருகிறாள். காமாக்ஷியின் கைகளில் ஒரு வில்லும் ஐந்து அம்புகளும் இருக்கும். அந்த வில் கரும்பினால் ஆனது. அம்புகள் புஷ்பங்களால் ஆனவை. சாதாரணமாகக் கெட்டியான இரும்பினால் வில் அமைந்திருக்கும்; இங்கோ மதுரமான கரும்பு அம்பாளுக்கு வில்லாக இருக்கிறது. கூரான அம்புகளுக்குப் பதில் மிகவும் மிருதுவான மலர்களைப் பாணங்களாக வைத்திருக்கிறாள். அந்தக் கரும்பு வில் மனஸ் என்ற தத்துவத்தைக் குறிப்பதாகும். மதுரமான மனம் படைத்த அம்பாள் நம் மனங்களையெல்லாம் இந்த வில்லைக் காட்டி வசப்படுத்திக் கொண்டு விடுகிறாள். அவளுடைய ஐந்து புஷ்ப பாணங்களும் நம் ஐம்புலன்களை ஆகர்ஷித்துச் செயலற்றுப் போகும்படி செய்வதற்காக ஏற்பட்டவை. 'மனோ ரூபேக்ஷு கோதண்டா — பஞ்சதன் மாத்ர ஸாயகா' என்று இதையே லலிதா ஸகஸ்ரநாமம் கூறுகிறது. நம்முடைய மனோ விருத்தியும், இந்திரிய விகாரங்களும் அடங்குவதற்கே பராசக்தியானவள் காமாக்ஷியாகி கரும்பு வில்லும், மலர் பாணமும் தாங்கி வந்திருக்கிறாள். நிறமே இல்லாத பிரம்மத்திலிருந்து செக்கச் செவேல் என்ற பரம கருணையின் நிறத்தோடு உதயசூரியன் மாதிரி, மாதுளம் பூ மாதிரி, குங்குமப்பூ மாதிரி, செம்பருத்தி மாதிரி காமேச்வரியான காமாக்ஷி அநுக்கிரக நிமித்தம் தோன்றியிருக்கிறாள்.

(அடுத்த இதழில்: **காமாக்ஷியின் சிவப்பு**)

# அமைதிப் பணியில் அசகாய சூரர்

**உலக சமாதானத்துக்காக அண்மைக் காலத்தில் கிஸ்ஸிஞ்ஜரைக் காட்டிலும் அதிகமாகப் பாடு பட்டவர் வேறு யாரும் இருக்க முடியாது. அமெரிக்கா — செஞ் சீனா; அமெரிக்கா — ருஷ்யா ஆகிய நாடுகளிடையே பனிப் போரும் பகைமை உணர்வும் மறைந்து சிநேக பாவம் வளரச் சமீப காலத்தில் அவர் அரும்பாடு பட்டிருக்கிறார் என்றாலும் வியட்நாம் போருக்கு முற்றுப்புள்ளி வைத்ததே இவரது மிகப் பெரிய சாதனையாகக் கருதப்பட்டு நோபெல் பரிசு வழங்கவும் தூண்டுதலாயிருந்தது எனக் கருதலாம். நோபெல் சமாதானப் பரிசு வாங்கிய கையோடு அவர் மேற்கு ஆசியப் போர் நிறுத்தத்துக்கும் அரும் பாடுபட்டு வருகிறார்.**



அமெரிக்க அரசின் வெளி உறவு அமைச்சர் டாக்டர் ஹென்றி ஏ. கிஸ்ஸிஞ்சர் உழைப்பால் உயர்ந்தவர். ஜெர்மனியிலிருந்து அகதிச் சிறுவனாக வந்து குடியேறிய அவர் இன்று தமக்குத் தஞ்சம் அளித்த நாட்டின் அமைச்சராக உயர்ந்துள்ளார் என்றால், அவரது அயராத உழைப்புக்கும், கூரிய மதி நுட்பத்துக்கும் வேறு சான்றும் வேண்டுமோ? அல்லது எல்லோருக்கும் சம வாய்ப்பு அளிக்கும் அமெரிக்க ஜனநாயக அமைப்பின் சிறப்புக்குத்தான் வேறு சான்று வேண்டுமா? அங்கு அறிவாற்றலுக்குத்தான் முதலிடம்.




இரண்டாவது உலகப் போர் தொடங்குவதற்கு ஓராண்டுக்கு முன்பு யூதக் குடும்பத்தைச் சேர்ந்த ஆல்பிரெடு ஹைன்ஸ் கிஸ்ஸிஞ்சர் என்னும் பதினைந்து வயது ஜெர்மன் அகதிச் சிறுவன் அமெரிக்காவில் குடியேறி, நியூயார்க் நகர உயர்நிலைப் பள்ளி ஒன்றில் சேர்ந்தான்.

இருபத்தொரு வயதில் அமெரிக்கத் தரைப் படையைச் சேர்ந்த 'பிரைவேட் ஹென்றி ஏ. கிஸ்ஸிஞ்சர்' மீண்டும் ஜெர்மனியில் இருந்தான். பின்வாங்கிச் செல்லும் நாஜித் துருப்புகள் கைவிட்டுச் சென்ற ஒரு நகரத்தில் மூன்றே நாட்களில் ஓர் ஊராட்சி அமைத்துக் கொடுத்தான். பிறகு ஒரு மாவட்டத்தை ஆளும் பொறுப்பே வந்து சேர்ந்தது. இவன் மாற்றலாகிப் போக நேர்ந்தபோது மக்கள் அதற்கு இலேசில் சம்மதிக்கவில்லை!

1947. முன்னாள் 'சார்ஜண்ட்' கிஸ்ஸிஞ்சர் இப்போது இருபத்திநான்கு வயது இளைஞர். கணக்கராக வேண்டுமென்று கனவு கண்டவர், மாஸசூஸெட்ஸ் மாநிலத்திலுள்ள ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் மேல் படிப்புக்காகச் சேர்ந்தார். கனவு நினைவாகவில்லை. நோக்கங்கள் திசை மாறிவிட்டன. பெரிய காரியங்களை இவர் மூலம் சாதித்துக்கொள்ள ஆண்டவன் விதித்திருந்ததாலோ என்னவோ முதலில் கணக்கராக நினைத்தவருக்குப் பின்னால் அவரது முப்பத்தியோராவது வயதில் ஹார்வர்டு பல்கலைக் கழகம் ஆட்சியியலில் 'டாக்டர்' பட்டம் வழங்கியது. ஆட்சியியல் பிரிவில் அவர் ஓர் ஆசிரியரானார்.

நூலாசிரியரும், பேராசிரியரும், அமெரிக்க அரசின் ஆலோசகருமான டாக்டர் கிஸ்ஸிஞ்சர் நாற்பத்தைந்து வயதில் நாட்டுப் பாதுகாப்புத் துறையில் அமெரிக்க அதிபரின் உதவியாளராக நியமிக்கப்பெற்றார். நியமித்தவர்: ரிச்சர்டு எம். நிக்சன்.

1973 செப்டம்பர் 21ந் தேதி கிஸ்ஸிஞ்சர் அமெரிக்க அரசின் வெளிஉறவு அமைச்சராகப் பதவி ஏற்றார். வெளி நாட்டிலிருந்து வந்து குடியேறி, அமெரிக்கரான ஒருவர் இந்தப் பதவி ஏற்பது இதுவே முதல் தடவை.

## பகலில் வேலை: இரவில் படிப்பு!

சிறு வயதில் இவர் குடும்பம் வருவாயின்றி இடர்ப்பட்டதால் பகலில் வேலை செய்வதன் பொருட்டு இரவுப் பள்ளியில் சேர்ந்து படித்து வந்தார் கிஸ்ஸிஞ்சர். முதலில் முகச் சவரத் தூரிகை செய்யும் ஓர் ஆலையில் வேலை பார்த்தார். பின்பு, பட்டுவாடாச் செய்யும் சிறுவனாக இருந்தார். கல்லூரிப் படிப்பின்போதும் இரவுப் படிப்புப் பிரிவில் சேர்ந்து கணித இயல் கற்றார். பகலில் வேலை பார்த்தார். தமக்கு இடமில்லை என்று கூறி அகதியாக்கி அனுப்பிய ஜெர்மனிக்கே அமெரிக்க ராணுவ அதிகாரி என்ற முறையில் திரும்பச் சென்று சிறப்புப் பணியாற்றிவிட்டு மீண்டும் அமெரிக்காவுக்கு இவர் திரும்பினார். இம்முறை அகதியாக வரவில்லை. அமெரிக்கக் குடிமகனாக வந்தார்.

ஐரோப்பாவிலிருந்து அவர் விரும்பிக் கொண்டு வந்த நாய் (காக்கர் ஸ்பானியல்)

### ஈச்சங்குடி ஐயனார்

திருவையாற்றுக்குக் கிழக்கே மூன்றாவது மைலில் உள்ள ஈச்சங்குடியில் தர்மசாஸ்தா எனப்படும் ஐயனார் ஆலயம் உள்ளது. பல ஆண்டுகளாக இம் மூர்த்தி வரப்பிரசாதி எனப் புகழ் பெற்றிருக்கிறார். இவ்வாலயத்துக்கு ராஜகோபுரம் எழுப்பும் பிரமுகர்கள் முயற்சி எடுத்துள்ளனர். இப் புண்ணியப் பணியில் உதவ விரும்புவோர், "ஸ்ரீ எஸ். வி. ரமணி, பொருளாளர், ஈச்சங்குடி ஸ்ரீ ஐயனார் கோயில் ராஜகோபுர நிர்மாணக் குழு, 173, வடக்கு மெயின் சாலை, தஞ்சாவூர்" என்ற விலாசத்துக்குப் பொருள் அனுப்பவும்.

அவரது இணைபிரியாத் தோழன். மனைவிகூட இத்தனை அன்பாக அமையவில்லை.

இருபத்தாறு வயதில் ஆன் ஃபிளேஷர் என்னும் பெண்மணியைத் திருமணம் செய்து கொண்டார். 1964ல் அவளை விவாகரத்து செய்தார்.

## அரசியல் அறிஞர்

டாக்டர் கிஸ்ஸிஞ்சர் 1957ல் "அணு ஆயுதங்களும் அயல்நாட்டுக் கொள்கையும்" என்னும் தமது முதல் பெரிய நூலை வெளியிட்டார். இது உலகம் முழுவதன் கவனத்தையும் பெற்றது. "புதிய அணுயுக அரசு நெறிக்கு" வழிகோலியது. போர் மூண்டால், பெருமளவில் அணு ஆயுதங்களைப் பயன்படுத்திப் பழி வாங்கலாமென நம்பிக்கை வைப்பதில் உள்ள ஆபத்து பற்றி அவர் சுட்டிக் காட்டினார்.

நூலை ஆர்வத்தோடு படித்தவர்களில் ஒருவர் ரிச்சர்டு நிக்ஸன். அப்பொழுது அமெரிக்க நாட்டின் துணை அதிபர். படித்துவிட்டு நூலாசிரியருக்கு ஒரு பாராட்டுக் கடிதமும் எழுதினார். இதைத் தொடர்ந்து கிஸ்ஸிஞ்சர் வேறு பல நூல்களும் எழுதினார்.

நூலுக்குப் பாராட்டுத் தெரிவித்துக் கடிதம் எழுதிப் பத்து ஆண்டுகள் கழித்து நியூயார்க் நகரில் ஒரு விருந்தில் முதல் முறையாக நிக்ஸனும் டாக்டர் கிஸ்ஸிஞ்சரும் சந்தித்து உரையாடினர். அவர்கள் நட்பு வளர்ந்து வலுப்பெற்றது.

அரசுப் பணி புரிவதற்காக டாக்டர் கிஸ்ஸிஞ்சர் தமது பல்கலைக் கழகத்திலிருந்து இரு ஆண்டுகள் விடுப்புப் பெற்றார்.

அதிபர் நிக்ஸன் முதல் தடவையாக 1968 ஜனவரி 20ந் தேதி வாஷிங்டனில் பதவி ஏற்றதும், அவருடைய சிறப்பு உதவியாளர் கிஸ்ஸிஞ்சர் வெள்ளை மாளிகையின் மேற்குப் பகுதியில் அடித்தளத்திலுள்ள சில சிறு அலுவலகங்களிலிருந்து பணிபுரியலானார்.

## இரகசியப் பயணங்கள்

டாக்டர் கிஸ்ஸிஞ்சர் 1971 ஜூலை மாதம் இரகசியமாகப் பீக்கிங் சென்று, நிக்ஸனுடைய சீனப் பயணத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டு வந்தார். சமாதானத்துக்காக நிக்ஸன் மேற்கொண்ட அந்தப் பயணம் 1972 பிப்ரவரியில் நடந்தது.

1972 ஏப்ரல் மாதம் டாக்டர் கிஸ்ஸிஞ்சர் இன்னொர் இரகசியப் பயணம் கிளம்பினார். மாஸ்கோ சென்று, கம்யூனிஸ்ட் கட்சிச் செயலாளர் பிரஸ்நேவையும் சோவியத் வெளியுறவு அமைச்சர் குரோமிக்கோவையும் கண்டு பேசிவிட்டு வந்தார். மே மாதம் நிக்ஸன் மாஸ்கோ சென்ற முதல் அமெரிக்க ஜனாதிபதி ஆனார். அதன் பயனாக இரு நாடுகளுக்கிடையே பல ஒப்பந்தங்கள் கையெழுத்தாயின. விண்வெளி ஆராய்ச்சி, விஞ்ஞானம், தொழில் நுட்பம், உடல்நலம், சூழ்நிலையியல் ஆகிய துறைகளில் இரு நாடுகளும் சேர்ந்து ஒத்துழைப்பதற்கும், வணிக ஒப்பந்தம் பேசி முடிவு செய்வதற்கான கூட்டுக் குழு ஒன்றை அமைப்பதற்கும் இரு நாடுகளும் ஒப்புக் கொண்டன.

மேலும் அமெரிக்காவும் ரஷ்யாவும் தத்தம் அணு ஆயுதத் தாக்குதல் ஏற்பாடுகளை மேற்கொண்டு பெருக்காமல் இன்றைய நிலையிலேயே வைத்துக் கொள்ளவும், தற்காப்புப் பறக்கும் குண்டு ஏற்பாடுகளுக்கு வரம்பு கட்டவும் ஒப்புக் கொண்டன. ஒத்துழைப்பு முயற்சிகளை இன்னும் பலபடப் பெருக்கவும், இராணுவ மோதல் முனைப்பைத் தவிர்க்கவும் கூட்டறிக்கை உறுதி கூறியது.

பாரிஸில் வட வியட்நாமியருடன் பேச்சு வார்த்தை நடத்தி முட்டுக்கட்டையை நீக்கி முன்னேற்றம் காணும் பொருட்டு, பன்னிரண்டு தடவை கிஸ்ஸிஞ்சர் இரகசியமாக அங்கு போய் வந்தார் என்று 1972 ஜனவரியில் அதிபர் நிக்ஸன் தெரிவித்தார். அதன் பின்னும் பேச்சு வார்த்தை பல மாதங்கள் நடைபெற்றது.

கடைசியாக 1973 ஜனவரி 23ல் டாக்டர் கிஸ்ஸிஞ்சரும் வடவியட்நாம் பிரதிநிதி லீ டக் தோவும் வியட்நாமில் சண்டையை நிறுத்திச் சமாதானம் காண்பதற்கான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

## நிக்ஸன் புகழ்மாலை

ஹார்வர்டு பல்கலைக் கழகத்து அலுவலிருந்து விடுப்பு பெற்று அதிபர் மாளிகையில் பணியாற்றி வந்த டாக்டர் கிஸ்ஸிஞ்சர் அந்த விடுப்பு முடிந்ததும், ஹார்வர்டு பதவியிலிருந்து விலகிக் கொண்டார். அப்போது அவருக்கு நிக்ஸன் எழுதிய பாராட்டுக் குறிப்பிடத்தக்கது. "நீங்கள் இல்லாமல் இந்த அரசு எப்படி இருக்கும் என்று என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை என்று ஒளிவு மறைவின்றிக் கூறுவேன்.... வெளியுறவுக் கொள்கை பற்றிய துறையில் இந்த நாடு அடைந்துள்ள பல சாதனைகளுக்கு உங்களுடைய ஆற்றலும் வரும்பொருள் உணரும் உங்களுடைய திறனும் பெரிதும் காரணமாகும்" என்றார் நிக்ஸன்.

அமைதிப் பணியில் அசகாய சூரரான இவரது மேற்கு ஆசியப் போர்நிறுத்த முயற்சியும் வெற்றிபெற உலகமே வாழ்த்துக் கூறுகிறது.

ஆதாரம்: ஃபிராங்க் கால்ப்பின் எழுதிய கட்டுரை.




தீபாவளி நன்னாள். காலையில் பட்டாசும் வெடிகளும் அதிருகின்றன. விஜய் அமிர்தராஜின் வெற்றியையும் சேர்த்துக் கொண்டாட! தீபாவளியன்று காலையில் விஜய் எதிர்பாராதவிதமாகச் சென்னையில் அவர் இல்லத்துக்கு வந்து சேர்ந்தது அனைவரையும் குதூகலத்தில் ஆழ்த்துகிறது; விஜய்யின் வெற்றி விஜயமாக அமைகிறது.

டென்னிஸ் மன்னர் கிருஷ்ணன் தமது அருமை மனைவி லலிதாவோடு வந்து விஜய் அமிர்தராஜுக்குத் தீபாவளிப் பரிசுப்பொட்டலத்தை வழங்குகிறார். ''விஜய்! கிராண்ட் பிரிக்ஸ் வெற்றிக்கு இத்தீபாவளி நன்னாளில் என் வாழ்த்துக்கள்!'' என்கிறார்.

விஜய் அமிர்தராஜின் அன்னையிடம், ''அம்மா! உங்கள் மகன் மாட்ச் கடைசி வரை ஒரே 'திரில்'ஆக இருந்தது!'' என்கிறார் ஸ்ரீமதி லலிதா.

''என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்? ஆண்டர்சன் 5-2 என்ற எண்ணிக்கையில் முன்னேறியபோது எனக்கு 'ஹார்ட் அட்டாக்' வந்துவிடும் போல் இருந்தது! எப்பவுமே விஜய் நம்மை விட்டுவிட்டு வாலைப் பிடிக்கிற கதையா விளையாடுவான். முதலிலே நிறைய ஸ்கோரைக் கொடுத்துவிட்டுக் கடைசியில் உயிரைவிட்டுப் பாடுபடுகிறான்! அவன் வெற்றியடையும்வரை என் மனம் படாத பாடு படுகிறது!'' என்று கூறுகிறார் விஜய்யின் அன்னை மாகி.

''ஆண்டர்சன், முந்தின நாள் அமெரிக்க டென்னிஸ் வீரர் கஸ்டப்புடன் நீண்ட நேரம் ஆடியதில் களைத்துப் போயிருக்கவேணும்!'' என்று இழுக்கிறார் விஜய்யின் தந்தை, ரயில்வே அதிகாரி அமிருதராஜ்.

'' ஆண்டர்சன் களைத்துப் போவதா? அப்படியெல்லாம் இல்லை. சில சமயம் சோர்வுற்று, கால் தள்ளாடுவதுபோல் ஆண்டர்சன் தென்படுவது உண்டு! அவர் 'ஸ்டாமினா' நினைத்துப் பார்க்க முடியாதது! எத்தனை 'கேம்' வேண்டுமானாலும் அவர் சளைக்காமல் ஆடுவார்!'' என்று அனுபவபூர்வமாகச் சொல்கிறார் கிருஷ்ணன்.

''ஸெட் பாயிண்டில் ஆண்டர்சன் இருந்தும் விஜய் வெற்றியைத் திருப்பியதைக் கேட்டு நாங்கள் அப்படியே அயர்ந்துவிட்டோம்!'' என்கிறார் ஸ்ரீமதி கிருஷ்ணன்.

''நீங்கள் மட்டும்தானா? அன்று மூன்று மணி நேரமும் மத்திய சர்க்கார் மந்திரிகள் சி. சுப்பிரமணியம், பக்ருதீன் அலி அகமது போன்றவர்கள் உட்கார்ந்த இடத்தைவிட்டு நகரவில்லை. விஜய் வெற்றி அடைந்ததும் மந்திரி சுப்பிரமணியம் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டே என்னைப் பார்த்து, ''உங்கள் மகனுக்கு நல்ல எதிர்காலம் உண்டு!'' என்று சொன்னார். ஆண்டர்சன் 5-2 'லீடில்' இருந்தபோது பலர் எழுந்து போய்விட்டார்கள். டெலிவிஷனில் விஜய் ஆட்டத்தின் உக்கிரத்தைக் கண்டுவிட்டுவிழுந்தடித்துக் கொண்டு திரும்ப ஓடிவந்தார்கள்!''

'' எங்களுக்குப் பிரார்த்தனையில் நம்பிக்கை உண்டு. விஜய்யின் வெற்றி எங்கள் பிரார்த்தனையின் பலன்தான்!'' என்கிறார் அன்னை மாகி பெருமிதத்துடன்.

''நம் பிரார்த்தனை மட்டுமா? தேசமே அவனது வெற்றியில் அக்கறை செலுத்தியதே! உலக டென்னிஸில் இந்தியா தலைதூக்க முடியும் என்ற நம்பிக்கை எழுந்திருக்கிறது'' என்கிறார் திரு அமிர்தராஜ்.

''எனக்கும் ஆண்டர்சனுக்கும் நடைபெற்ற போட்டி ரொம்பக் கடுமையானது. இருவருக்குமே வெற்றி வாய்ப்பிருந்தது. அதிர்ஷ்டவசமாக நான் கடைசியில் நன்றாக ஆடிவிட்டேன்!'' என்கிறார் விஜய் அமிர்தராஜ் அடக்கமாக.

''வால்வா கார் வந்துவிட்டதா?'' என்று அமெரிக்க வெற்றிப் பரிசைப் பற்றி நினைவுபடுத்துகிறார் கிருஷ்ணன்.

''வால்வா கார் கப்பலில் வந்து கொண்டிருக்கிறது. நவம்பர் முதல் வாரத்தில் வந்து சேரும். இந்தியப் பிரதமர், அந்தக் காருக்குள்ள சுங்க வரித் தொகையைக் குறிப்பிட்டுக் கல்வி இலாகாவுக்கு எழுதச் சொல்லிச் சென்னை சுங்க கலெக்டருக்கு உத்தரவு அனுப்பியிருக்கிறாராம்! கல்வி இலாகாவே இந்தப் பரிசுக்கான சுங்க வரியைக் கட்டப் போகிறது'' என்று தெரிவிக்கிறார் திரு அமிர்தராஜ்.

''வால்வா கார் வரும்போது மறுபடியும் விஜய் சகோதரர்கள் டென்னிஸ் திக்விஜயத்தில் அல்லவா இருப்பார்கள்?'' என்று கூறுகிறார் திரு கிருஷ்ணன்.

''என்ன பண்ணுவது? அந்தப் பரிசுக் காரில் தம்பதிகளாகிய நாங்கள்தாம் பவனி வரணும்போல் இருக்கு!'' என்று கூறிச் சிரிக்கிறார் தந்தை அமிர்தராஜ்.

சென்னையில் மே மாதம் நடைபெற்ற டெவிஸ் கோப்பைப் பந்தயத்தில் விஜய், ஆண்டர்சனிடம் தோற்றுப்போனதை இப்பொழுது தலைநகரில் ஈடு செய்திருக்கிறார். அதனால்தான் இந்தியாவே அவரைக் கொண்டாடுகிறது; பாரதப் பிரதமரே பாராட்டித் தந்தி அனுப்பிக் கௌரவித்திருக்கிறார்! நாமும் வாழ்த்துகிறோம்!

— குண்டுமணி

# நீங்களே ரிப்பேர் செய்யத் தேவையில்லை




## உங்களுக்குப் பணிபுரியக் காத்திருக்கிறோம்

**Prestige** **PREETT**

உங்களுடைய சௌகரியத்துக்காக 250க்கும் மேற்பட்ட பராமரிப்புப் பணி நிலையங்களை நாடு முழுதும் அமைத்திருக்கிறோம்.

உங்களுடைய பிரஸ்டீஜ் குக்கரைப் பரிசோதிக்க வேண்டியிருந்தால், உங்கள் அருகாமையில் உள்ள இந்தப் பணி நிலையங்களுள் ஒன்றிற்கு எடுத்துச் செல்லுங்கள். பயிற்சிபெற்ற மெக்கானிக் சரியான கருவிகளை கொண்டு அதைப் புதியதைப் போன்று செய்து தருவார்.

எங்கள் பராமரிப்புப் பணி நிலையங்கள் பற்றிய இலவசப் பட்டியலுக்கு எழுதுங்கள். மகிழ்ச்சியோடு அனுப்பிவைக்கிறோம்.

பிரஸ்டீஜ்-பிரீத் உங்கள் தேவைகளை பிரத்தியேகமாக செயலாற்றுகிறது.

**எச்சரிக்கை**

எப்போதும் அசல் மாற்றுப் பகுதிகளையே வாங்குங்கள். அவை கம்பெனியின் சின்னம் பொறிக்கப்பட்டு, பிரஸ்டீஜ்/பிரீத் டிரேட் மார்க்குடன் பாலிதீன் பைகளில் சீல் வைக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகின்றன.

போலியான மாற்றுப் பகுதிகளை வாங்காதீர்கள். அவை சரிவர இயங்காது.

**டிடி. (பிரைவேட்) லிமிடெட்,**
தூரவாணி நகர், பெங்களூர் 560016




TTP/110C

# சிவகாமியின் சபதம்

இருபத்தேழாம் அத்தியாயம்

## ஒரு குதிரை



அமரர்
கல்கி

பல்லவ சக்கரவர்த்தியையும் அவருடைய திருக் குமாரரையும் பார்த்தவுடனே சற்றுத் தூரத்திலேயே சிவிகை தரையில் இறக்கப்பட்டது. ஆயனரும் சிவகாமியும் சிவிகையிலிருந்து இறங்கிப் பயபக்தியுடன் நடந்து வந்தார்கள்.

"ஆயனரே! வாருங்கள்! சிவகாமியையும் அழைத்து வந்தீர்களா? மிகவும் நல்லது. பிரயாணம் சௌகரியமாயிருந்ததா?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"பல்லவேந்திரா! தங்களுடைய குடை நிழலின் கீழ்ப் பிரயாணம் சௌகரியமாயிருப்பதற்குக் கேட்பானேன்?" என்று கூறிய வண்ணம் ஆயனர் அருகில் வந்து வணங்கினார்.

அவருக்குப் பின்னால் அடக்கத்துடன் வந்த சிவகாமியும் சக்கரவர்த்திக்கு நமஸ்கரித்தாள். அவளுடைய உள்ளத்தில் சக்கரவர்த்தியிடம் பக்தியும் மரியாதையும் நிறைந்திருந்தன. அதே சம

யத்தில் இன்னதென்று தெரியாத ஒருவகைப் பயமும் குடிகொண்டிருந்தது.

''சிவகாமி! உனக்கு மங்களம் உண்டாகட்டும். உன்னிடம் அடைக்கலம் புகுந்திருக்கும் பரத சாஸ்திரக் கலை மேலும் மேலும் வளர்ந்து பூரணம் அடையட்டும்'' என்று மகேந்திர பல்லவர் ஆசி கூறிவிட்டு ஆயனரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார்:

''ஆயனரே! இன்றைக்கு உங்கள் பிரயாணம் சௌகரியமாயிருந்தது என்று சொன்னீரல்லவா? இனி நெடுகிலும் வார்த்தை வேண்டாம். நீரும் உம் புதல்வியும் நாளை முதல் இங்கே வந்து விட வேண்டியது. இது நமது ஆக்ஞை'' என்றார்.

ஆயனர் நடுங்கியவராய், ''பல்லவேந்திரா! தங்கள் ஆக்ஞைக்கு மறுவார்த்தை உண்டா? அவ்விதமே செய்கிறேன்'' என்றார்.

''ஆயனரே! இந்தக் கோயில்களை எவ்வளவு சீக்கிரமாக வேலை செய்யலாமோ அவ்வளவு சீக்கிரமாக முடிக்க வேண்டும். கோயில்கள் பூர்த்தியாகும் வரையில் நீர்



அப்படியே இருக்கும் என்று சொல்வதற்கில்லை. இந்த யுத்தம் முடியும்வரையில், சாலைகளிலே சைனியங்களின் நடமாட்டம் அதிகமாயிருக்கும். ஆகையால் இன்னும் கொஞ்ச காலத்துக்கு நீர் இங்கேயே வந்து தங்கியிருப்பது நல்லது...''

ஆயனருக்குத் தூக்கி வாரிப்போட்டது. அரண்ய வீட்டில் அரைகுறையாகச் செய்யப்பட்டுக் கிடந்த நடன சிற்ப உருவங்கள் எல்லாம் அவருடைய கண் முன்னால் நின்றன.

''பல்லவேந்திரா!...'' என்று ஏதோ சொல்லத் தொடங்கினார்.

மகேந்திரர் தமது குரலைச் சிறிது கடுமைப்படுத்திக் கொண்டு, ''மறு வேறு எந்த வேலையையும் கவனிக்க வேண்டியதில்லை. இந்த வேலைக்காக நீர் எப்போது எவ்வளவு திரவியம் கேட்டாலும் கொடுக்கும்படியாகத் தனாதிகாரிக்குக் கட்டளையிட்டிருக்கிறேன். இன்னும் உமக்கு வேண்டிய ஆட்களையும், வேறு வசதிகளையும் உடனுக்குடன் அனுப்பும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன். எந்தக் காரணத்தினாலாவது காரியம் குந்தகப்படுவதாயிருந்தால் நீர் குமார சக்கரவர்த்திக்குச் செய்தி அனுப்பி வேண்டியதைத் தெரியப்படுத்தலாம்'' என்று சக்கரவர்த்தி கூறியதும், அருகில் நின்ற மாமல்லரை ஆயனர் நோக்கினார்.

''ஆம், ஆயனரே! இனிச் சில காலத்துக்கு உமக்கு வேண்டியதையெல்லாம்



மாமல்லரிடம்தான் தெரியப் படுத்த வேண்டும். நாளைய தினம் பல்லவ சைனியத்துடன் நான் போர்க் களத்துக்குப் புறப்பட்டுச் செல்கிறேன். நான் திரும்பி வரும்வரையில் பல்லவ சாம்ராஜ்யத்தை நிர்வகிக்கும் சகல பொறுப்புக்களையும் மந்திரி மண்டலத்தார் மாமல்லருக்கு அளித்திருக்கிறார்கள். நாளை முதல் மாமல்லர்தான் சக்கரவர்த்தி'' என்றார் மகேந்திர பல்லவர்.

சக்கரவர்த்தி ஆயனரிடம் சற்றுக் கடுமையான குரலில் கூறிவந்த மொழிகளைக் கேட்டுக் கவலையும் பயமும் கொண்டிருந்த சிவகாமி அவருடைய கடைசி வார்த்தைகளைக் கேட்டதும் அளவிலாத குதூகலம் அடைந்தாள். அவளுடைய மனத்தில் பலவித இன்பகரமான எண்ணங்கள் பொங்கித் ததும்பின. அவற்றுள் முக்கியமானது மாமல்லர் இப்போது போர்க் களத்துக்குப் போகவில்லை என்பதுதான். அதனோடு, சக்கரவர்த்தியும் போய்விடுகிறார். மாமல்லர் சக்கரவர்த்திக்குரிய சர்வாதிகாரங்களுடன் இருக்கப் போகிறார்! இனி அவரும் தானும் அடிக்கடி சந்திப்பதற்குத் தடை யொன்றும் இராது! தாமரைக் குளக்கரையில் மாமல்லரைச் சந்தித்து அளவளாவுவதைப் பற்றிய பகற் கனவுகள் சிவகாமியின் உள்ளத்தில் எழுந்தன. முகத்தில் அவளை அறி

யாமல் முறுவல் தோன்றியது. ஆசை ததும்பிய கண்களின் ஓரத்தினால் மாமல்லரை அவள் பார்த்தாள். ஆனால், ஐயோ! இதென்ன? அவருடைய கருணை ததும்பும் முகத்தில் இப்போது ஏன் இந்தக் கடுகடுப்பு? தன்னை ஏன் அவர் திரும்பிப் பார்க்கவில்லை? ஒருவேளை தான் அவ்விடம் வந்ததே அவருக்குப் பிடிக்கவில்லையோ?

பின்னரும், இரண்டு மூன்று தடவை சிவகாமி மாமல்லரின் முகத்தை ஆவலுடன் நோக்கினாள். அவர் அவள் பக்கம் பார்க்கவே யில்லை. நேற்றுத் தாமரைக்குளத்தில் அகன்ற கண்களால் விழுங்கிவிடுபவர் போல் தன்னைப் பார்த்தவர், பின்னர் வீட்டிலே சக்கரவர்த்தியும் ஆயனரும் பேசிக் கொண்டிருந்த போது அடிக்கடி கண்களினாலே தன்



னுடன் இரகசியம் பேசியவர், இப்போது, தன்னைப் பார்க்கவும் விரும்பாதவர் போல் இருப்பதன் காரணம் என்ன? சிவகாமியின் கண்களில் கண்ணீர் ததும்பும்போல் இருந்தது. அவள் விரைவாக அங்கிருந்து அப்பால் சென்று ஒரு பாறையின் பின்னால் ஒதுங்கி நின்றாள்.

ஆனால், நரசிம்மருடைய மனநிலை உண்மையில் எவ்வாறு இருந்தது? ஆம்; அவர் கோபம் கொண்டுதான் இருந்தார். ஆனால் யார்மீது என்பதை நாம் அறியோம். அது நரசிம்மருக்கே தெரிந்திராதபோது நமக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?

மாமல்லருடைய உள்ளத்தில் சிவகாமியிடம் பிரேமை பொங்கிக்கொண்டிருந்தது. சிவிகையிலே அவளுடைய திவ்ய வதனத்தைப் பார்த்ததும் அவருக்கு எல்லையில்லாத குதூகலம் ஏற்பட்டது. உடனே ஓடிச் சென்று அவளை வரவேற்க வேண்டும் என்றும், கையைப் பிடித்துச் சிவிகையிலிருந்து இறக்கிவிட வேண்டுமென்றும் ஆவல் பொங்கிற்று. அதெல்லாம் முடியாமற் போகவே அவருடைய ஆசை கோபமாக மாறியது. அந்தக் கோபமானது எல்லாவற்றையும் எல்லாரையும் தழுவி நின்றது. பெரிய சாம்ராஜ்யத்துக்கு உரிமையுடன் பிறந்த தமது பிறப்பின் மேலேயே கோபங் கொண்டார். 'எதற்காகச் சக்கரவர்த்தியின் அரண்மனையிலே நாம் பிறந்திருக்க வேண்டும்? ஏழைச் சிற்பியின் மகனாக ஏன் பிறந்திருக்கக் கூடாது?' என்று எண்ணினார்.

தாம் போர்க் களத்துக்குப் போகப் போவதில்லை என்று தந்தை சொன்னதும் சிவகாமியின் முகத்தில் பூத்த புன்முறுவல் அவருடைய கோபத்துக்குத் தூபம் போட்டது போலாயிற்று. போர்க்களத்துக்குப் போகாமல் அரண்மனையில் உட்கார்ந்திருப்பது அவமானம் என்பதை அவள் உணரவில்லை! போர்க்களத்துக்குப் போகா விட்டாலும் அவளை அடிக்கடி பார்க்கவாவது முடியப் போகிறதா? அதுவும் இல்லை. காஞ்சிக் கோட்டையை விட்டு வெளிக் கிளம்பக் கூடாது என்று தந்தை வாக்குறுதி வாங்கிக்கொண்டிருக்கிறார். இதையெல்லாம் அறியாமல் சிவகாமி புன்னகை பூத்து மகிழ்கிறாள்!

இம்மாதிரி எண்ணங்களினால் நரசிம்ருடைய கோபம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டு வந்தது.

* * *

மனோலோகத்தில் இந்த நாடகம் நடந்து கொண்டிருக்கையில், சக்கரவர்த்தியும் ஆயனரும் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

பேசும்போதே, தம்முடைய முகத்தையும் மாமல்லருடைய முகத்தையும் ஆயனர் மாறி மாறி ஏறிட்டுப் பார்ப்பதைக் கவனித்த சக்கரவர்த்தி, ''ஆயனரே! ஏதாவது கோரிக்கை உண்டா? என்னிடமோ மாமல்லரிடமோ தெரியப்படுத்த வேண்டியது ஏதாவது இருக்கிறதா?'' என்று வினவினார்.

ஆயனர் தயங்கித் தடுமாறி ''ஆம், பல்லவேந்திரா! எனக்கு ஒரு குதிரை வேண்டும்!'' என்றார்.

''என்ன கேட்டீர்?''

''நல்ல குதிரை ஒன்று வேண்டும்.''

'' குதிரையா ? குதிரை வேண்டும் என்று கேட்டீர்? ஆயனரே! அதைச்

காட்டிலும் என்னுடைய உயிரை நீர் கேட்டிருக்கலாம். இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தையே கேட்டிருக்கலாம். நன்றாய்க் குதிரை கேட்டீர், ஆயனரே! தென்னாடு என்றும் கண்டிராத மகா பெரிய யுத்தம் வந்திருக்கிறது என்று உமக்குத் தெரியாதா? காஞ்சியிலிருந்து தினந்தோறும் எத்தனை தூதர்கள் நாலா பக்கங்களுக்கும் போக வேண்டியிருக்கும் என்று தெரியாதா? குதிரையைத் தவிர வேறு ஏதாவது கேளும்!'' என்று சக்கரவர்த்தி சரமாரியாகப் பொழிந்து நிறுத்தினார்.

மகேந்திர பல்லவர் இவ்வளவு படபடப்புடன் பேசிக் கேட்டு ஆயனர் அறியாதவராதலால் மிரண்டு ஸ்தம்பித்து நின்றார்.

''ஓஹோ! உமக்கு வேறு ஒன்றும் வேண்டாம், குதிரைதான் வேண்டும் போலிருக்கிறது. பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா சிற்பி ஒரு குதிரையை யாசித்தார், அதை மகேந்திர பல்லவன் கொடுக்கவில்லை என்ற பழிச் சொல் எனக்கு வேண்டாம். குதிரை தருகிறேன்; ஆனால், எதற்காக என்று மட்டும் சொல்லும். நீரும் சிவகாமியும் பிரயாணம் செய்வதற்கு வேண்டிய சிவிகைகளும், சிவிகை தூக்கும் ஆட்களும் இருக்கிறார்கள் அல்லவா? பின் குதிரை எதற்கு?'' என்று சக்கரவர்த்தி கேட்டு நிறுத்தினார்.

ஆயனர் சற்றுத் தைரியமடைந்து, ''பல்லவேந்திரா! மிகவும் முக்கியமான ஒரு காரியத்தை முன்னிட்டுத்தான் கேட்டேன். ஆனால், அதனாலே யுத்த காரியங்கள் தடைப்படுவதாயிருந்தால்....'' என்று நிறுத்தினார்.

''அந்த முக்கியமான காரியம் என்ன? எனக்குத் தெரியலாமா? அல்லது ஏதேனும் இரகசியமா, ஆயனரே?''

''பிரபு! இரகசியம்தான்! ஆனால், தாங்கள் அறியக் கூடாத இரகசியம் அல்ல. அஜந்தா வர்ணச் சித்திரங்களின் இரகசியத்தை அறிய வேண்டுமென்று எத்தனையோ தடவை நாம் பேசிக்கொண்டதில்லையா? அந்த வர்ண இரகசியத்தை அறிந்தவர் ஒருவர் நாகார்ஜுன பர்வதத்தில் உள்ள புத்த சங்கிராமத்தில் தற்சமயம் இருக்கிறார்.''

''இதை முன்னமே ஏன் சொல்லவில்லை, ஆயனரே? அவ்வளவு முக்கியமான காரியம் என்று தெரிந்திருந்தால், ஆட்சேபமே சொல்லியிருக்க மாட்டேனே? — அஜந்தாவின் அற்புதச் சித்திரங்களை நேரில் போய்ப் பார்த்து வர வேண்டுமென்ற ஆசையினால் வாதாபி புலிகேசியுடன் சிநேகம் செய்துகொள்ள வேண்டுமென்று கூட ஒரு காலத்தில் எண்ணியிருந்தேன். அதெல்லாம் பகற் கனவாய்ப் போய் விட்டது — போகட்டும். குதிரை அவசியம் தருகிறேன், ஆயனரே! குதிரை மட்டும் போதுமா, இன்னும் ஏதாவது வேண்டுமா?''

''பல்லவேந்திரரின் ரிஷப இலச்சினை பதித்த பிரயாணச் சீட்டும் வேண்டும். இது யுத்த காலமல்லவா?''

''அதுவும் தருகிறேன். இவ்வளவு முக்கியமான காரியத்துக்கு யாரை அனுப்புவதாக உத்தேசம் ஆயனரே? ஒருவேளை நீரே போவதாக உத்தேசமா?''



''எனக்குக் குதிரை ஏறவே தெரியாது பிரபு! என்னுடைய சீடன் ஒருவனை அனுப்புகிறேன்.''

''பகைவர் படைகள் வரும் வழியிலே அவன் போக வேண்டியிருக்குமே! கையிலே நல்ல ஆயுதம் எடுத்துப் போக வேண்டும். இதோ இந்த வேலை அவனிடம் கொடுத்து அனுப்புங்கள்!'' என்று கூறிச் சக்கரவர்த்தி நரசிம்மரிடமிருந்து தாம் வாங்கி வைத்திருந்த வேலை நீட்டினார்.

ஆயனர் சற்றுத் தயங்கி நிற்கவே ''ஏன் தயக்கம்? இந்த வேல் நீர் அனுப்பப் போகும் வாலிபனுடைய வேல்தான்; மதயானையின் கோபத்தி

லிருந்து உம்மையும் சிவகாமியையும் பாதுகாத்த ஆயுதந்தான்; பரஞ்சோதி இதை வாங்கிக்கொள்ள ஆட்சேபிக்க மாட்டான்'' என்றார் சக்கரவர்த்தி.

இதைக் கேட்ட ஆயனர் மட்டுமல்ல, நரசிம்மரும் சிவகாமியும்கூட — ஆச்சரியக் கடலில் மூழ்கினார்கள்.

ஆயனர் தட்டுத் தடுமாறி ''பல்லவேந்திரா! தங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்றார்.

''புத்த பகவான் என் கனவிலே வந்து சொன்னார். அன்று உம் வீட்டில் தம்முடைய சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந்தவர்களைப் பற்றியும் புத்தர் எனக்குக் கூறினார். ஆயனரே! பல்லவ சக்கரவர்த்தியின் கண்களுக்கும் காதுகளுக்கும் எட்டாமல் பல்லவ சாம்ராஜ்யத்



தில் எதுவும் நடக்க முடியாது என்று உமக்குத் தெரியாதா?''

உடனே ஆயனர் கைகூப்பி வணங்கி, ''பல்லவேந்திரா! நான் ஏதேனும் தவறு செய்திருந்தால் மன்னிக்கவேண்டும். சித்திரக் கலையில் உள்ள ஆசையினால் இந்தக் காரியத்தில் இறங்கினேன்'' என்று தொண்டை யடைக்கக் கூறினார்.

''சிற்பியாரே! அஜந்தா இரகசியத்தை அறிவதில் உமக்கு எவ்வளவு ஆசையோ அவ்வளவு எனக்கும் உண்டு. திவ்யமாய்ப் பரஞ்சோதியை அனுப்பி வையும். ஆனால் இதெல்லாம் எனக்குத் தெரிந்ததாக அந்தப் புத்த பிக்ஷுவிடம் மட்டும் சொல்ல வேண்டாம். ஏனோ தெரியவில்லை; பௌத்தர்களுக்கு என் பேரில் இல்லாத சந்தேகங்கள் எல்லாம் தோன்றுகின்றன. புத்த பகவானிடம் எனக்குள்ள பக்தியை அவர்கள் அறியவில்லை. ஆயனரே! குன்றைக் குடைந்து அமைக்கும் இந்த ஐந்து கோயில்களில் ஒன்றில் புத்த பகவானுடைய பிரம்மாண்ட சிலை யொன்று செய்து வைக்கப் போகிறேன். அதைப் பற்றித்தான் நீர் வரும்போது மாமல்லரிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்!'' என்றார் சக்கரவர்த்தி.

இவ்விதம் இங்கு ரஸமான சம்பாஷணை நடந்து கொண்டிருந்தபோது, பாறை ஓரத்தில் சற்று மறைவாக நின்று இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த சிவகாமியின் உள்ளத்தில் பல விதமான எண்ணங்கள் அலையெறிந்து எழுந்தன.

'இந்தச் சக்கரவர்த்திதான் எவ்வளவு சதுரராயிருக்கிறார்! புத்த பிக்ஷுவைப் பற்றி மாமல்லரிடம் நாம் எச்சரிக்கை செய்ய வேண்டுமென்றிருக்க இவருக்கு ஏற்கனவே எல்லாம் தெரிந்திருக்கிறதே! இவரிடம் எதையும் மறைத்து வைக்க முடியாது போலிருக்கிறதே! ஒருவேளை நம்முடைய இரகசியத்தையும் இவர் அறிந்திருப்பாரோ! அதனாலேதான் ஒருவேளை குமாரச் சக்கரவர்த்தி நம்மிடம் இவ்வளவு பராமுகமாக இருக்கிறாரோ? நாம் ஏதேனும் தவறு செய்து விட்டோமோ?...'

இவ்விதம் எண்ணாத தெல்லாம் எண்ணி அவள் உள்ளம் ஏங்கிற்று. விரைவிலேயே குமார சக்கரவர்த்தியைத் தனிமையில் பார்த்து அவருடைய கோபத்துக்குக் காரணம் தெரிந்து கொண்டாலன்றி, அவளுக்கு மனச் சாந்தி ஏற்படாதென்று தோன்றியது.

தற்செயலாகச் சிவகாமியின் பார்வை கீழே தரையில் கிடந்த ஒரு காவிக் கட்டியின்மேல் விழுந்தது. சட்டென்று ஒரு யோசனை தோன்றிற்று. அந்தக் காவிக் கட்டியைக் குனிந்து எடுத்துக்கொண்டு பாறையில் சித்திரம் வரையலானாள்.

குளத்தின் தண்ணீருக்கு அடையாளமாக அலையைப் போன்று இரு கோடுகளை இழுத்தாள். அதன் மேல் ஒரு தாமரைப் பூவை வரைந்தாள். பக்கத்தில் இரண்டு தாமரை மொட்டுக்களையும் போட்டாள். குளத்தின் கரையிலே ஒரு மான்குட்டியின் சித்திரத்தை எழுதினாள்.

எழுதும்போதே கடைக் கண்ணால் பார்த்து, நரசிம்மவர்மர் தன்னைக் கவனிப்பதைத் தெரிந்து கொண்டாள்.

"அவர் சொன்னார், இந்தக் கொஞ்சும் அழகை மிஞ்ச முடியாது!"

"நான் சொன்னேன், அசோக்கை மிஞ்ச முடியாது!"

நான் அசோகா பிரின்டுகளை அணிந்து எப்பொழுது புறப்பட்டாலும், அனைவரது கண்களும் என்மீதே பதிகின்றன, என்னையே பாராட்டுகின்றன. ஆகையால் நான் இப்போதெல்லாம் அசோகா மில் துணிகளையே அணிந்து வருகிறேன். அசோகாவின் பாலியெஸ்டர் கலந்த துணிகளுக்கும் இணையேது? அவை அணிவதற்கு சுகமானவை; கண்ணுக்கும் அழகானவை! நான் அவருக்காகவும் அசோகா மில்லின் அழகான கட்டம் போட்ட ஷர்ட்டிங் வாங்கித்தந்திருக்கிறேன். ஏனெனில், அவரைப் பாராட்ட எனக்கும் வாய்ப்புக் கிட்டுமே!



அசோக மில்ஸ்

ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



லால்பாய் க்ரூப் துணிகள்

CMLB.21.203 TM

சித்திரம் எழுதி முடிந்ததும் சிவகாமியின் மனத்தில் அமைதி ஏற்பட்டது. அந்தச் சித்திரத்தில் அடங்கிய செய்தியை நரசிம்மவர்மர் கட்டாயம் தெரிந்து கொள்வார். மற்றவர்களுக்கோ அதில் அர்த்தம் ஒன்றும் இராது. ஏதோ கிறுக்கியிருக்கிறது என்றுதான் எண்ணிக் கொள்வார்கள்! குமாரச் சக்கரவர்த்திக்குத் தன்னிடம் அன்பு உண்டென்பது உண்மையானால் இந்தச் சித்திரத்தைப் பார்த்துவிட்டு, அவசியம் அவர் தாமரைக் குளத்துக்கு வந்து சேருவார்!

* * *

அன்று மாலை சக்கரவர்த்தியும் குமாரரும் குதிரைகளின் மேல் ஏறிக் காஞ்சிக்கு இராஜபாட்டை வழியாகக் கிளம்பினார்கள். அந்தப் பாதை மத்தியானம் அவர்கள் வந்திருந்த ஐந்து குன்றுகளின் ஓரமாகத்தான் சென்றது. அவ்விடத்துக்கு வந்ததும் நரசிம்மர் சற்றுப் பின்தங்கினார். சிவகாமி சித்திரம் எழுதிய பாறைக்கு அருகில் வந்ததும் குதிரையை நிறுத்திவிட்டுக் கீழே இறங்கினார். அங்கே எழுதியிருந்த சித்திரத்தைப் பார்த்ததும் அவருடைய முகம் அந்தத் தாமரையைப் போலவே மலர்ச்சியடைந்தது. தரையில் கிடந்த அதே காவிக் கட்டியை அவரும் எடுத்து மானுக்கும் தாமரைக்கும் நடுவில் ஒரு வேலின் சித்திரத்தை எழுதினார்.

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# மலை வழியில்

சென்ற அத்தியாயத்தில் கூறிய சம்பவம் நிகழ்ந்த நாலு தினங்களுக்குப் பிறகு பரஞ்சோதி போர்வீரனைப் போல் உடை தரித்து, கையில் வேல் பிடித்து, அழகிய உயர் சாதிப் புரவியின்மேல் அமர்ந்து மலைப் பாதையில் தன்னந் தனியாகப் போய்க் கொண்டிருந்தான்.

சூரியன் அஸ்தமிக்க இன்னும் இரண்டு நாழிகைப் பொழுதுதான் இருந்தது. எனினும், அந்த மலைப் பிரதேசத்து மாலை வெய்யில் அவனுடைய இடது கன்னத்தில் சுள்ளென்று அடித்தது.

பகல் நேரம் எல்லாம் தகிக்கும் வெய்யிலில் பிரயாணம் செய்து பரஞ்சோதி களைத்துப் போயிருந்தான்; குதிரையும் களைப்படைந்திருந்தது. எனவே, குதிரையை மெதுவாகச் செலுத்திக் கொண்டு சென்றான்.

குதிரை மெல்ல மெல்ல அம் மலைப் பாதையில் ஏறி மேலே சென்றுகொண்டிருக்கையில், பரஞ்சோதியின் உள்ளம் அடிக்கடி பின்னால் சென்று கொண்டிருந்தது. சென்ற ஒரு வார காலத்தில் அவன் அடைந்த அதிசயமான அநுபவங்கள் எல்லாம் திரும்பத் திரும்ப அவனுக்கு ஞாபகம் வந்து கொண்டிருந்தன.

காஞ்சி நகரில் புத்த பிக்ஷுவுடன் பிரவேசித்த அன்றிரவு நடந்த சம்பவங்கள் நினைவு வந்தபோதெல்லாம் அவை உண்மையில் நிகழ்ந்தவைதானா? அல்லது கனவிலே நடந்த சம்பவங்களா என்று பரஞ்சோதி அதிசயித்தான். பன்னிரண்டு நாட்களுக்கு முன்னால் திருச்செங்காட்டாங் குடியிலிருந்து கால்நடையாகக் கிளம்பிய பட்டிக்காட்டுச் சிறுவனா இன்று இந்த அழகான புரவியின் மேல் ஏறிச் செல்பவன் என்றுகூட அவன் ஆச்சரியப்பட்டான்.



* * *

வெய்யிலின் வேகத்தினால் வியர்வையைத் துடைக்க வேண்டியிருந்தபோதெல்லாம் பரஞ்சோதிக்குத் தமிழகத்துச் சாலைகளின் அழகும் வசதிகளும் ஞாபகத்துக்கு வந்து கொண்டிருந்தன. சோழ நாட்டிலும் தொண்டை நாட்டிலும் சாலை ஓரங்களில் பெரிய விருட்சங்கள் அடர்த்தியாய் வளர்ந்து, குளிர்ந்த நிழல் தந்து கொண்டிருக்கும். சாலைகளின் இருபுறங்களிலுமுள்ள வயல்களில் பசுமையான நெற் பயிர் இளந் தென்றலில் அசைந்தாடும். முதிர்ந்த

பயிர்கள் கதிரின் பாரம் தாங்கமாட்டாமல் வயல்களில் சாய்ந்து கிடக்கும். ஆங்காங்கே பசுமையான தென்னந்தோப்புக்களும் மாந்தோப்புகளும் கண் குளிரக் காட்சி தந்துகொண்டிருக்கும். வாழைத் தோட்டங்களையும் கரும்புத் தோட்டங்களையும் கண்ணால் பார்த்தாலே நா வறட்சி தீர்ந்து தணியும்.

ஆம்; வழிப் பிரயாணத்தின்போது தாகம் எடுத்துத் தவிப்பதென்பது அங்கெல்லாம், கிடையவே கிடையாது. தாமரையும் செங்கழுநீரும் நீலோற்பலமும் பூத்த குளங்களுக்குக் கணக்கேயில்லை. ஆறுகளும் சிற்றாறுகளும் சின்னஞ் சிறு வாய்க்கால்களும் அடிக்கொன்றாக வந்து கொண்டிருக்கும். இரு புறமும் பசுமையான செடிகொடிகள் படர்ந்து சிறு வாய்க்கால்களில் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தால் அது ஓர் அழகு; தண்ணீர் இன்றி வாய்க்கால் வறண்டிருந்தால் அது இன்னொரு வகை அழகு. வறண்ட வாய்க்கால்களின் சிறு மணலில் நடப்பதைப் போன்ற இன்பம் வேறு என்ன உண்டு? அப்படி நடக்கும் போது இரு கரைகளிலும் ஆங்காங்கே படர்ந்துள்ள காட்டு மல்லிகைக் கொடிகளில் பூத்த மலர்களிலிருந்து வரும் நறுமணம் எவ்வளவு மனோகரமாக இருக்கும்?

அதற்கு இணையான இன்பம் இன்னொன்று சொல்ல வேண்டுமானால் உச்சி வேளையில் ஆலமரங்களும் வேப்ப மரங்களும் தழைத்து வளர்ந்த இராஜபாட்டைகளில் பிரயாணம் செய்வது தான். இந்தப் பங்குனி மாதத்தில் சாலை ஓரத்து ஆலமரங்களிலே புதிய இளந் தளிர்கள் 'பளபள'வென்று மின்னிக்கொண்டிருக்கும். வேப்ப மரங்கள் பூத்துக் குலுங்கும்! மாமரங்கள் புதிய தளிர் விடும் அழகைத்தான் என்னவென்று சொல்ல? ஒரு நாளைக்கு மாமரம் முழுதும் கருநீல நிறம் பொருந்திய இளந் தளிர்களின் மயமாயிருக்கும். மறுநாளைக்குப் பார்த்தால் கருநீல நிறம் இளஞ் செந்நிறமாக மாறியிருக்கும். அதற்கு அடுத்த நாள் அவ்வளவு தளிர்களும் தங்க நிறம் பெற்றுத் தகதகவென்று மின்னிக் கொண்டிருக்கும்.

இப்பேர்ப்பட்ட இயற்கை இன்பங்களை அளித்த இறைவனுடைய திருப்புகழை இன்னிசையிலே அமைத்து மரக்கிளைகளில் ஊஞ்சலாடும் பூங்குயில்கள் இடைவிடாமல் பாடிக் கொண்டிருக்கும்.

திருச்செங்காட்டாங்குடியிலிருந்து காஞ்சிக்கு வரும் வழியில் இம்மாதிரி இன்பக் காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டு வந்த பரஞ்சோதி அச்சமயம் அந்தக் காட்சிகளின் அழகையோ, இன்பத்தையோ அவ்வளவாக அனுபவிக்கவில்லை.

இப்போது, எங்கே பார்த்தாலும் மொட்டைக் குன்றுகளே காணப்பட்ட பொட்டைப் பிரதேசத்தில், பசுமை என்பதையே காண முடியாத வறண்ட பாதையில், அவன் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோதுதான், சோழ மண்டலத்து வயல்களும், தோப்புகளும், தொண்டை மண்டலத்து ஏரிகளும் காடுகளும் அவன் மனக் கண்ணின் முன்னால் அடிக்கடி தோன்றி இன்பமளித்தன.

* * *

மேற்குத் திசையில் மலைகளுக்குப் பின்னால் சூரியன் மறையத் தொடங்கியபோது, பரஞ்சோதி, அந்த மலைப் பாதையில் ஒரு முடுக்கில் திரும்பினான். அன்றைக்கெல்லாம் முட் புதர்களையும் கள்ளிச் செடிகளையும் தவிர வேறு எதையும் காணாமல் வந்த பரஞ்சோதிக்கு எதிரே, அப்போது ஓர் அபூர்வமான காட்சி தென்பட்டது. கண்ணுக்கெட்டிய தூரம் நெட்டையும் குட்டையுமான புரச மரங்கள், — ஆயிரம் பதினாயிரம் மரங்கள் — இலை என்பதே இல்லாமல் ஒரே பூமயமாய்க் காட்சியளித்தன. அவ்வளவும், இரத்தச் சிவப்பு நிறமுள்ள கொத்துக் கொத்தான பூக்கள். மாலைக் கதிரவனின் செங்கிரணங்கள் அந்தப் புரசம் பூக்களின் இரத்தச் செந்நிறத்தை மிகைப்படுத்திக் காட்டின.

அது அபூர்வமான அழகு பொருந்திய காட்சிதான். ஆனால் ஒரு, வகை அச்சம் தரும் காட்சியுமாகும். பரஞ்சோதி பிறந்து வளர்ந்த திருச்செங்காட்டாங்குடி கிராமத்தில் தென்மேற்கு மூலையில் இருந்த மயானத்தில் சில புரச மரங்கள் உண்டு. அவை பங்குனி சித்திரையில் இவ்விதம் ஒரே செந்நிறப் பூமயமாயிருப்பதை அவன் பார்த்திருந்தான். எனவே, புரச மரங்கள் பூத்திருக்கும் காட்சியைப் பார்க்கும்போது அவனுக்கு ருத்ர பூமியின் நினைவு வருவது வழக்கம்.

இப்போது அவன் கிராமத்துக்கு எத்தனையோ தூரத்துக்கு அப்பால் தனியான காட்டு வழியில் போய்க் கொண்டிருந்தபோது, மேற்கூறிய மயானத்தின் ஞாபகம் தோன்றி அவன் மனத்தில் பயங்கரத்தை உண்டுபண்ணிற்று. மயானத்தின் நினைவோடு பேய் பிசாசுகளின் நினைவும் சேர்ந்து வந்தது. மற்ற விஷயங்களில் மிக்க தைரியசாலியான பரஞ்சோதிக்குப் பேய் பிசாசு என்றால் பயம் அதிகம். 'இன்றைக்கு இந்தக் காட்டு வழியில் இருட்டிய பிறகும்

போக வேண்டுமே!' என்று நினைத்த போது அவனுடைய நெஞ்சையும் வயிற்றையும் என்னவோ செய்தது. அதோ அந்த இரண்டு மலைகளும் கூடுகிற இடத்தில் இவன் அன்றிரவு தங்க வேண்டிய சத்திரம் இருப்பதாக அவன் அறிந்தான். அங்கே போய்ச் சேருவதற்குள்ளே இருட்டி ஒரு ஜாமத்துக்கு மேலாகி விடலாம். நிலா வெளிச்சமோ இராது. முன்னிருட்டுக் காலம். 'அடடா! வழியில் ஏன் இவ்வளவு தாமதித்தோம்?' என்று எண்ணியவனாய்ப் பரஞ்சோதி குதிரையை வேகமாய்ச் செலுத்த முயன்றான். ஆனாலும் பகலெல்லாம் பிரயாணம் செய்து களைத்திருந்த குதிரை எவ்வளவுதான் வேகமாய்ப் போய்விடக் கூடும்?

நிர்மானுஷ்யமான அந்த மலைப் பிரதேசம் உண்மையில் அச்சத்தைத் தருவதாய்த்தான் இருந்தது. பட்சிகள் மிருகங்கள் கூட அங்கே காணப்படவில்லை. இருட்டிய பிறகு நரிகள் ஊளையிட ஆரம்பிக்கும்; பயங்கரத்தை அவை இன்னும் அதிகப்படுத்தும்.

நேற்றெல்லாம் பரஞ்சோதி நேர் வடக்கே சென்ற விசாலமான இராஜ பாட்டையில் பிரயாணம் செய்தான். அதில் ஜனநடமாட்டமும் குதிரைகளின் போக்குவரவும் அதிகமாயிருந்தன. பாதையில் பல இடங்களில் அவன் நிறுத்தப்பட்டான். சக்கரவர்த்தி தந்திருந்த பிரயாண இலச்சினையை அவன் அங்கங்கே காட்டிக் கொண்டு போக வேண்டியிருந்தது.

இன்று காலையிலே இராஜ பாட்டையை விட்டு மலைப் பாதையில் திரும்பிய பிறகு அத்தகைய தொந்தரவு ஒன்றுமில்லை. ஆனால் இப்போது பரஞ்சோதிக்கு ஒரு பெரிய குதிரைப் படையே அந்த வழியில் வரக்கூடாதா என்று தோன்றியது.

ஆ! அது என்ன சத்தம்! குதிரைக் குளம்படியின் சத்தம் போலிருக்கிறதே! ஆம்; குதிரைதான் பின்னால் வந்து கொண்டிருக்கிறது. வருகிறது யாராயிருக்கும்? யாராயிருந்தபோதிலும் நல்லதுதான். இருட்டுக்கு வழித் துணையாயிருக்குமல்லவா?

வருகிறது ஒரே குதிரையா? பல குதிரைகளா? பரஞ்சோதி தன் குதிரையை நிறுத்திவிட்டுக் காது கொடுத்துக் கேட்டான். சட்டென்று சத்தம் நின்றுவிட்டது. ஒருவேளை வெறும் பிரமையோ? யாராவது வரக் கூடாதா? என்று அடிக்கடி எண்ணியதன் பயனோ?

பரஞ்சோதி மேலே குதிரையைச் செலுத்தினான். மறுபடியும் பின்னால் குதிரை வரும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தால் ஒன்றும் தெரியவில்லை. மலைப் பாதை வளைந்து வளைந்து சென்றதனால் குதிரை சமீபத்தில் வந்தாலும் அதைத் தான் பார்க்க முடியாது.

இதற்குள்ளே சூரியன் அஸ்தமித்து நாற்புறமும் இருள் சூழ ஆரம்பித்து விட்டது.

அதிக வளைவு இல்லாமல் பாதை நேராகச் சென்ற இடத்திற்கு வந்த போது பரஞ்சோதி குதிரையைச் சற்று நேரம் வேகமாக விட்டுக்கொண்டு போய்ச் சட்டென்று நிறுத்திவிட்டுத் திரும்பிப் பார்த்தான். கொஞ்ச தூரத்தில் ஒரு குதிரை வந்து கொண்டிருந்தது. அதன் மேல் ஆள் இருப்பதும் தெரிந்தது. பரஞ்சோதியின் குதிரை நின்றதும் அவனும் தன் குதிரையை நிறுத்தினான்.

பரஞ்சோதிக்குச் சொல்ல முடியாத கோபம் வந்தது. குதிரையை வாகவமாய்த் திருப்பிப் பின்னால் நின்ற குதிரையை நோக்கி விரைவாகச் சென்றான். அப்பொழுது கையெழுத்து மறையும் நேரம். (தொடரும்)

## சுலபத்திலும் சுலபம்!



"அல்லவானேன்? டெலிஃபோனில் சுலபமாகப் பேசி விடலாமே?" என்கிறோம். டெலிஃபோனில் பேசுவதையும் சுலபமாக்க பெல் டெலிஃபோன் கம்பெனி ஆராய்ச்சியாளர் முன் வந்துள்ளனர்.

இந்தப் புதிய பாணி டெலிஃபோனில் வழக்கம்போல் எண்களைச் சுழற்ற வசதியுண்டு. இதைத் தவிர இதில் முப்பத்தோரு பட்டன்கள் உள்ளன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு நபரின் டெலிஃபோன் நெம்பரை நினைவில் வைத்துக் கொள்கின்றன. ஒரு பட்டனை அழுத்தினால் அது தானியங்கு முறையில் தனக்கென ஒதுக்கப்பட்டுள்ள குறிப்பிட்ட நபரின் வீட்டுக்கு டெலிஃபோன் செய்கிறது. ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசைக்கிரமமாக நமது முப்பத்தோரு நண்பர்களின் பெயர்ப் பட்டியலை டெலிஃபோனில் இணைத்து வைத்துக் கொள்ளலாம். பட்டியல் குறிப்பிடுகிற என்னுடைய நண்பரிடம் பேச அந்த எண்ணுள்ள பட்டனை அழுத்தினாலே போதும்! □

# அழகு முகம் ஒவ்வொன்றுக்குள்ளும் அழகு ரகசியம் ஒன்று ஒளிந்திருக்கிறது.




சலுகை—

லாக்டோ-காலமைன்

## அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

டெபார்-இண்டர்ப்ரான் லிட்., தபால் பெட்டி எண் 6582, பம்பாய் 400 018

# ராஜாஜியின் ஜெயில் டைரி

## 1922 மார்ச், 4உ

சனிக்கிழமை: இன்றும் சுரம் நீங்கவில்லை. நேற்று இரவு அதிகக் கஷ்டம். தூக்கம் கிடையாது. திருவண்ணாமலைக் கைதிகள் தங்கள் அறைக்கு வந்துவிடும்படி அதிகமாக வற்புறுத்தினார்கள். அதனால் அவர்கள் அறைக்கு வந்திருக்கிறேன். இவர்கள் மிகவும் நல்லவர்கள். அண்ணாமலைப் பிள்ளை பாவம் ஆஸ்துமாவினால் அதிகமாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார். அவருக்குக் கடுங்காவல் தண்டனை கொடுத்திருக்கிறார்கள். அவர் அதை அதிக நாட்கள் அனுபவிக்க முடியுமோ என்பது சந்தேகமாயிருக்கிறது. நேற்று இரவு முழுவதும் காலை மூன்று மணி வரையில் நான் கண் மூடவேயில்லை. போதாக்குறைக்கு மூட்டைப் பூச்சிகளுடைய வேதனையும் சேர்ந்துகொண்டது. அவை மட்டுமில்லாதிருந்தால் இந்த அறை வசதியாகவே இருக்கும்.

## 1922 மார்ச், 5உ

ஞாயிற்றுக்கிழமை: மூட்டைப் பூச்சிகளின் உபத்திரவத்தைத் தாங்க முடியவில்லை. அதனால் முன்போல் பழைய அறைக்குப் போய்விட்டேன். சுரமிருக்கும் பொழுது இன்றைக்கும் தூங்காமல் இருப்பது என்னால் முடியாத காரியம்.

வெந்நீர் ஸ்நானம் செய்வதற்காக, ''சின்னக் கஞ்சி ஆபீஸ்'' என்று வழங்கும் தனிச் சிறைப் பகுதிக்கே செல்ல வேண்டியிருக்கிறது. அங்குள்ள மற்ற வசதிகளையும் அந்தச் சமயத்தில் உபயோகித்துக் கொள்கிறேன். அங்கு போகும் பொழுது சொந்த வீட்டுக்குப் போவது போல் இருக்கிறது. இந்த வார்டு நகரம் போல் நெருக்கமாகவும் அந்த வார்டு நாட்டுப்புறம் போல் அமைதியும் சாந்தமும் நிறைந்ததாகவும் தோன்றுகின்றன.

இங்கே இரவில் உபயோகிப்பதற்காக மூன்று சட்டிகளை மூடி போட்டுக் கொண்டு வந்து வைக்கிறார்கள். இந்த மாதிரிதான் ஆஸ்பத்திரியிலும் செய்கிறார்கள். மூட்டைப் பூச்சிகளும் சிலைப் பேன்களும் தங்குதடையின்றிச் சஞ்சாரம் செய்கின்றன. எங்களைத் தினந்தோறும் மாலையில் ஆறு மணிக்கே அடைத்துவிடுகிறார்கள். இப்படி அடைப்பதற்குமுன் நாங்கள் இரண்டு இரண்டு பேராக அறையின் முன் வரிசையாக உட்கார்ந்திருக்க வேண்டும். அதன்பின் தலைமை வார்டர் வந்து எங்களை எண்ணுவார். அதன்பின் ''எழுந்து உள்ளே செல்க'' என்று கட்டளை யிடுவார். நாங்கள் எழுந்து உள்ளே செல்வோம். அவர்கள் கதவை இழுத்துப் பூட்டுவார்கள்.

காலையில் ஆறு மணிக்கு வந்து எங்களை எழுப்புவார்கள். கதவைத் திறந்ததும் நாங்கள் நாலு பேர் வரிசையாக உட்கார வேண்டும். எண்ணிச் சரி



பார்க்கும்வரை பேசாமல் இருக்க வேண்டும். அதன்பின் குழல் ஊதுவார்கள். எட்டு மணிக்கு மறுபடியும் பூட்டிவிடுவார்கள். பிறகு குளிக்கவும் சாப்பிடவும் மட்டும் திறப்பார்கள். அவை முடிந்ததும் மறுபடியும் அடைத்து விடுவார்கள்.

## 1922 மார்ச், 6உ

திங்கட்கிழமை: மறுபடியும் முழங்காலுக்குக் கீழே பரு உண்டாகிவிட்டது. மருந்து ஊசி குத்தியதன் பலன் தீர்ந்து போய்விட்டது என்று தெரிகிறது.

ஒத்துழையாமைக்காரர்கள் சமையல் செய்வது சரியாக நடந்து வருகிறது. வரதாச்சாரியும் ராமராவும் சர்மாவும், வெங்கட சுப்பையாவும் அழகாகச் சமைக்கிறார்கள். மற்றவர்கள் இடையிடையே அவர்களுக்கு உதவி செய்கிறார்கள். அந்த நால்வரும் சமையலுக்கென்றே பிறந்தவர்கள் போல் அந்த வித்தையை அவ்வளவு சீக்கிரத்தில் கற்றுக் கொண்டுவிட்டார்கள்.

# நிர்லான் உடன் நகரை அலங்கரிப்பது யாரோ?




எங்கும் காணும் இனிய ஜோடி...
நியூ ஓரியண்டல் ஸில்க் மில்ஸ் மற்றும்
நிர்லான். அடியான இணைப்புகளிலும் பாகப்
பூட்டும் ஜோடி. பல்வேறு டிசைன்கள், ஷர்ட்டிங்குகள்
சூட்டிங்குகள், மற்றும் இதர எளிய துணிவகைகள்
—இணைப்பில் வெளிப்படும் இன்னழகு.

தலைசிறந்த மில்கள் உபயோகிப்பது **நிர்லான்** இழை!

**நிர்லான் ஸிந்தெடிக் ஃபைபர்ஸ் அண்ட் கெமிகல்ஸ் லிட்**

Interpub/NIR/35A/72 Tam





# ஒன்றேகால் ரூபாயில் திருமணம்!

**வரதட்சிணைக் கொடுமை ஒருபுறம் இருக்க வரதட்சிணையே வாங்காமல் மணம் செய்து கொள்ள ஆள் இருந்தாலும் திருமணம் செய்து தரப் பல ஆயிரம் வேண்டியுள்ளது. இப்படியிருக்கும்போது ஒன்றேகால் ரூபாயில் ஒரு திருமணம் நம் நாட்டில் நடைபெறுகிறது என்றால் ஆச்சரியமாக இல்லையா?**

சீக்கியர்களில் நாம்தாரி சீக்கியர்கள் ஒரு பிரிவு. குரு கோவிந்த சிங்குக்குப் பிறகு சீக்கிய ஆசார்யர்களாக விளங்கியவர்கள் பாலக் சிங், அதன்பின் ராம்சிங். ராம்சிங் தான் இந்த நாம்தாரி பிரிவினரை ஏற்படுத்தியவர். இப்போது இந்தியாவில் சுமார் பத்து லட்சம் நாம்தாரி சீக்கியர் இருக்கின்றனர். புலால் உணவு, மது எதுவும் அவர்கள் இருக்கும் திக்கிலேயே தலைகாட்டக் கூடாது. மிகவும் கட்டுப்பாடான சாதியினர். அவர்களிடையே ஆடம்பரம், ஏழை பணக்காரர் எதுவும் கிடையாது.

அந்தஸ்து ஆடம்பரம் எதுவும் அவர்கள் திருமணத்தில் கிடையாது. கோஷ்டித் திருமணத்துக்கு நாள் குறிப்பிடப்படும். அதுவரையில் நிச்சயிக்கப்பட்ட மாப்பிள்ளையும் பெண்ணும் காத்திருக்கவே வேண்டும். தனிப்பட்ட முறையில் தனித் திருமணம் நடைபெற அனுமதி தரப்பட மாட்டாது.

இத்திருமணங்கள் நாம்தாரி சீக்கியர்களின் குருவின் முன்னிலையில்தான் நடைபெறும். இப்போது குருவாக இருப்பவர் ஜக்ஜித் சிங் மகராஜ் என்பவர்.

திருமணத்தன்று மணமகன்கள் எல்லோரும் வட்டமாக உட்கார்ந்திருப்பர். எதிரில் தீ வளர்த்துச் சீக்கிய கிரந்தத்தைப் படித்து ஹோமம் நடைபெறும். மணப்பெண் தனக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மணமகனுக்கு வெள்ளை மணிகள் கோக்கப்பட்ட மாலையை அணிவித்து அவன் வலது புறத்தில் உட்காருவாள். பூர்ண ஆஹூதியின்பின் மணமகனும் மணப் பெண்ணும் எழுந்து நின்று அக்னியை வணங்குவர். இருவருடைய உடைகளின் தலைப்புக்களை ஒன்றாகச் சேர்த்து அதில் ஒன்றேகால் ரூபாயை வைத்து அவர்களின் குரு முடிவார். இந்த ஒன்றேகால் ரூபாயை மணமகன்தான் தர வேண்டும்.

அக்னியைப் பெண்ணும் மாப்பிள்ளையும் வலம் வந்தபின்பு எல்லாருக்கும் உணவளிக்கப்படும். இதற்காக ஆகும் செலவுக்கு அந்தத் திருமண முடிப்பான ஒன்றேகால் ரூபாய்தான் பயன்படுத்தப்படும். எளிய உணவு சிறிதளவு அனைவருக்கும் வழங்குவர். அவ்வளவே.

முடிப்பை அவிழ்த்தபின் பெண்ணும், மாப்பிள்ளையும் அவரவர்கள் வீட்டுக்குப் போவார்கள். அன்று மாலை பெண் தன் கணவன் வீட்டுக்கு வந்துவிட வேண்டும். சீர் செனத்தி என்று எல்லாம் உண்டு என்கிறீர்களா? அதுதான் இல்லை. கட்டின வெள்ளைப் புடவையுடன்தான் கணவன் வீட்டுக்கு வருவாள். திருமணத்துக்காகப் பட்டு பீதாம்பரம் என்று எதுவும் கிடையாது. வெள்ளைப் புடவை; வெள்ளை வேஷ்டிதான். பணக்காரர்களாகட்டும், ஏழைகளாகட்டும். இதுதான் திருமண முறை.

திருமணக் கட்டணம் ஒன்றேகால் ரூபாய் தான். அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்று யாராவது இஷ்டப்பட்டால் ரூபாய் பதின்மூன்று வரை கொடுக்கலாம். அதற்கு மேல் கொடுக்க அனுமதிக்கப்பட மாட்டாது.

நாம்தாரி சீக்கியரான சுவரண்சிங் சொல்கிறார்:

"எங்கள் எல்லோருக்கும் இம்மாதிரி தான் திருமணமாகியது. நாங்கள் எல்லோருமே சந்தோஷமாக இருக்கிறோம்.

"எங்களிடையே காதல் கல்யாணமும் உண்டு."

உலகிலேயே வேறெங்கும் இவ்வளவு சிக்கனமாகத் திருமணம் நடைபெறுவதாகத் தெரியவில்லை.

— ரஜன்

மேலே: ஸ்ரீ சத்குரு ஜக்ஜித் சிங்ஜி ☐ ஒன்றேகால் ரூபாய் மணமக்கள் தலைப்புக்களில் முடியப்படுகிறது. கீழே: புதுமணத் தம்பதிகள் அக்னியை வலம் வரப் புறப்பட்டிருக்கிறார்கள்.



# பிஜ் உபயோகித்து எப்படியெல்லாம் சேமிக்கலாம் பாருங்கள்!

## சேமிப்பு

முதலில், மிகவும் பயனுள்ள
சூப்பர் டிடர்ஜெண்ட்
கொண்ட பவுடர் வாங்குவீர்.
அதுவும், மிகவும் வசதியான,
மீண்டும் பயன்படும்
பிளாஸ்டிக் பேக்கில்.
ஒரு பைசா கூட அதிகம்
தரவேண்டாம்.

## சேமிப்பு

5-கி.பில் பேக்கிலிருந்து
நீங்கள் ஒவ்வொரு முறை
நிரப்பும்போதும்,
80 பைசா சேமியுங்கள்.
இவ்வாறு 5 முறை
நிரப்புகையில் மொத்தம்
ரூ. 4.00 மிச்சம்.

## சேமிப்பு

2-கி.பில் பேக்கிலிருந்து
நீங்கள் ஒவ்வொரு முறை
நிரப்பும்போதும்,
55 பைசா சேமியுங்கள்.
இவ்வாறு 2 முறை
நிரப்புகையில் மொத்தம்
ரூ.1.10 மிச்சம்.










சேமிப்புக்கு சேமிப்பு; கூடவே,
உங்கள் சமையல் மற்றும்
கண்ணாடிப் பாத்திரங்கள்,
தரை மற்றும் குளியலறை
தந்திடும் கண்ணைப் பறிக்கும்
பளபளப்பு!

பிஜ்: நுரை கொழிக்கும்,
சட்டென்று துலக்கும் சூப்பர் டிடர்ஜெண்ட்.
தனிச் சிறப்புள்ள, பல-பயன்கொண்ட
துலக்கும் பவுடர்.

**பிஜ்—**

**கோத்ரெஜ் தயாரிப்பு**

CMGS-50-202 TM

# அழகுள்ள செல்வி



இது ஒரு நல்ல காதல் கதை. ஆனால் காதல் பாதை அவ்வளவு எளிதான பாதையாக இருப்பது இல்லையல்லவா? அது மீண்டும் நிரூபித்துக் காட்டப்படுகிறது, இப்படத்தில்.

ஸெலினு என்ற பெண் (ஜெயபாரதி) ஜானி என்ற இளைஞனை (வின்ஸென்ட்) காதலிக்கிறாள். ஸெலினுவின் தந்தையோ, டைமண்ட் மத்தாய் என்ற தரகரின் உதவியோடு வேறோர் இடத்தில் அவளுக்குக் கல்யாணம் நிச்சயிக்கிறார். இது ஸெலினுவுக்குப் பிடிக்கவில்லை. காதலனுக்குத் தெரிவிக்கிறாள். காதலன் ஜானியோ, குடும்ப கௌரவத்தையும், பெற்றோர்களின் விருப்பத்தையும் அனுசரித்து, பெற்றோர்கள் நிர்மானித்த வரனையே மணந்து கொள்ளும்படி யோசனை கூறுகிறான். ஆனால் அவள் அதை ஏற்கவில்லை. அதிலிருந்து காதல் பாதையில் எத்தனை எத்தனையோ இடையூறுகள்.

மலையாளப் படங்கள் என்றால் இயற்கைக்கு ஒட்டி வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக இருக்கும் என்று நாம் கருதுகிறோமல்லவா? அந்த விதிக்கு விலக்காக அமைந்துள்ளது இந்தப் படம். 'பாக்ஸ் ஆபீஸ்' நோக்குடன் பாலும் டான்ஸ், டுவிஸ்ட், ஜெர்க் டான்ஸ்கள், டப்பாங்குத்துச் சண்டைக் காட்சிகள் ஆகியவை சேர்க்கப்பட்டுள்ளன. ஏன், தவிர்க்க முடியாத நவீனக் காட்சியான பெண்ணை வற்புறுத்தி மானபங்கப்படுத்தும் காட்சியும் இருக்கிறது. இவை யாவும் மிக மிக மிதமாக இருக்கின்றன. இதைப் பார்க்கும்போது மிக ஆசாரசீலனாக வாழ்ந்தவன், அநாசார வாழ்க்கை நடத்த வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டால் எப்படி அவதியுறுவானோ அப்படி சங்கடப்பட்டு டைரக்டர் சேது மாதவன் அக்காட்சிகளை எடுத்திருக்கிறார் என்று எண்ணத் தோன்றுகிறது.

எஸ்டேட் முதலாளி குன்வச்சனாக வரும் பிரேம் நசீரும், அவர் மனைவியாக நடிக்கும் காஞ்சனாவும் தாங்கள் ஏற்றுள்ள பாத்திரப் படைப்புக்கு ஏற்ப நடித்திருக்கிறார்கள்.

பாடல்கள் காதுக்கு ரம்மியமாக இருக்கின்றன. ஜேசுதாஸ், பி. சுசீலா, எஸ். ஜானகி பி. லீலா போன்றவர்கள் அவற்றை வழங்கியிருக்கிறார்கள்.

கேரள நாட்டு இயற்கை வனப்பு வண்ணக் காட்சியாகப் படம் முழுவதும் விரவிக் கண்களுக்கும் மனத்துக்கும் குளிர்ச்சியை நல்குகிறது.

—எஸ். வி. எஸ்.

## ஒலி அலைப் படம்!

வயிற்றிலிருக்கும் குழந்தையை ஒலி அலைகளால் படம் பிடித்துக் காட்டும் கருவி ஒன்றைக் கலிபோர்னியாவில் மென்லோ பார்க் நகரிலுள்ள ஸான்போர்டு ஆராய்ச்சிக் கழகத்தார் கண்டுபிடித்திருக்கிறார்கள். எக்ஸ்-ரே படத்தில் துலங்காத உள் உறுப்புகளையும் மெல்லிய திசுக்களையும் தொலைக்காட்சித் திரையில் காணும்படியாகப் புதிய ஒலிப் படக் கருவி எடுத்துக் காட்டுகிறது. குழந்தை வயிற்றில் இருக்கும்போது அதன் அசைவுகளை மருத்துவர்கள் அறிந்துகொள்ள இப்புதிய கருவி உதவும். மேலும் இருதய நோய், புற்றுநோய் முதலிய பிணிகளைக் கண்டுகொள்ளவும் உதவும். இக் கருவி பயன்படுத்தும் ஒலி அலைகள் செவிப்புலனுக்கு மேற்பட்ட ஒலி அலைகளாகும். இக் கருவியினால் ஒரே நோயாளியைப் பல தடவைகூடப் படம்பிடித்துப் பார்க்கலாம்; சிகிச்சை எவ்வளவு பலனளித்து வருகிறது என்பதைக் காண இது உதவும். இப்படிப் பல தடவை எக்ஸ்-ரேயினால் படம் பிடிப்பதனால் எக்ஸ்-ரே அளவுக்கு மிஞ்சி உடம்பில் பாயும் ஆபத்து உண்டு. அந்தத் தொல்லை இந்த ஒலிப் படமுறையில் இல்லை.

டாக்டர் சந்திரனின் அறையில் நாங்கள் அரட்டை அடித்துக் கொண்டிருந்த சமயம். வளர்ந்து வரும் அந்தச் சிற்றூரில் அரசாங்க அலுவல்களில் அமர்ந்திருந்த நாங்கள் ஒருவரையொருவர் சந்தித்து உரையாடுவதுதான் பொழுது போக்கு.

டாக்டர், ஸப் இன்ஸ்பெக்டர் சிவதாஸ், மருந்துக்கடை செட்டியார் ஆகிய மூவருடன் நானும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த சமயம் முத்துலிங்கபுரம் போஸ்ட்மாஸ்டர் ராஜா முகமது உள்ளே நுழைந்தார்.

'' என்ன டாக்டர் ! ஊரையே வளைத்துப் போட்டுக்கொண்டுஉட்கார்ந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார் முகமது.

''வாருங்கள், வாருங்கள் !'' என வரவேற்றார் டாக்டர்.

'' ஏன் ! போஸ்ட்மாஸ்டர் ஸார் !.... நீங்கள் மாற்றலாகிப் போகிறீர்களாமே, உண்மைதானா ?..... இப்போதுதானே வந்தீர்கள் ?'' என்று கேட்டேன் நான்.

# ஆவிகள் ஆபத்து ஜாக்கிரதை!

## அன்னம்

''ஆமாம்..... ஆமாம்.... வீட்டில் பேய் இருக்கிறது என்று யாரோ புரளியைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள்..... ஒரு நாள்கூட அவள் தங்கமாட்டேன் என்கிறாள்... வேறு வழியில்லை!'' என்று அலுத்துக் கொண்டார்.

மேடையில் ஏறிக் கொள்கை முழக்கும் பல பெரியவர்கள் வீட்டில் எத்தனை பெட்டிப் பாம்பாக அடங்கிப் போயிருக்கிறார்கள் என்று நினைத்துக் கொண்டேன்.

மருந்துக்கடைச் செட்டியார் தொண்டையைக் கனைத்து விட்டுக் கொண்டார். ''அவர்கள் சொல்வதில் உண்மை இருக்குமுங்க. என் வாழ்க்கையிலே பாருங்க...'' என ஆரம்பித்தார்.

செட்டியார் நீட்டி முழக்கி விவரித்த அதே அனுபவத்தைத்தான் நான் இப்போது கூறப் போகிறேன்.

அப்போது நான் சென்னையில் இருந்தேன். சொந்த வியாபாரம் அப்போது தொடங்கவில்லை. ஒரு நாள் நான் ரயிலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். பறந்து கொண்டிருந்தேன் என்றுகூடச் சொல்லலாம். வண்டி புறப்பட அரை மணி நேரம்தான் இருந்தது. வீட்டு வாசலில் டாக்ஸி காத்துக் கொண்டு இருந்தது. அடையாற்றிலிருந்து எழும்பூர் வந்து வண்டி ஏற வேண்டும்.

''நான் போய் வாரேன், செங்கமலம் !'' என்று விடைபெற்றுக் கொண்டேன்.

'' கொஞ்சம் இருங்க.... இந்தத் திருநீற்றுப் பிரசாதத்தை உங்கள் சட்டைப் பையில் வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று உலர்ந்த இலையில் இருந்த அந்தத் திருநீற்றுப் பிரசாதத்தை அவள் என்னிடம் நீட்டினாள். உலர்ந்து போயிருந்த அந்த இலை நான் வாங்கும்போதே துகள் துகளாகச் சிதறியது.



''மனிதனின் அவசரம் கொஞ்சமும் புரியாத ஜன்மம்'' என முணு முணுத்தபடி அவள் கொடுத்ததை அப்படியே வாங்கிச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு டாக்ஸிக்குள் தாவினேன்.

என்னுடைய முதலாளிக்கும் அவர் பங்காளிகளுக்கும் பல நாட்களாக நடந்து வந்த ஒரு தாவா முதலாளியின் பக்கம் தீர்ப்பு

ஆகியிருந்தது. அதன்படி அவர் சொந்தக் கிராமத்திலிருந்து அவர் பெயருக்கு வந்திருந்த சொத்துக்களில் ஒரு பெரிய வீடும் இருந்தது. அந்த வீட்டைப் போய்ப் பார்த்து அதற்கும் அங்கிருந்த பொருள்களுக்கும் ஒரு ஜாபிதா தயாரித்துத் தோராயமாக என்ன மதிப்பு பெறும் என்பதைக் கணக்கிடவே நான் போவேன். முதலாளி அந்த வீட்டை உடனே விற்றுவிட நினைத்தார். அதற்கு முன்பு அங்கு ஏதேனும் நல்ல சாமான்கள் இருந்தால் அவற்றை ஏலத்தில் விடலாமே என்ற சபலம் அவருக்கு இருந்தது.

திருவனந்தபுரம் மெயிலில் நான் புறப்பட்டேன். சாதாரணமாக அந்த வண்டி நான் போக வேண்டிய ஊருக்குப் பக்கத்து ஸ்டேஷனைப் பகல் பத்தரை மணிக்கு அடைந்து விடும். அன்று அந்த வண்டியில் பிரபல நடிகரும் அரசியல் தலைவரும் ஆகிய ஒரு பெரும் புள்ளி வந்ததால் வண்டியை வழி மறித்துப் பல இடங்களில் நிறுத்தினார்கள். நான் போக வேண்டிய ஊரை அடையும் போது இருட்டத் தொடங்கிவிட்டது.

நல்ல வேளை. நான் அதிகம் நடக்கவேண்டி இருக்கவில்லை. ஸ்டேஷனிலிருந்து அரை மைலுக்குள் ஊருக்கு வெளியிலேயே அந்த வீடு இருந்தது. முதலாளி முன்னமேயே கடிதம் போட்டு இருந்ததால் வீட்டுச் சாவியை வைத்துக் கொண்டு மருதாசலம் காத்துக் கொண்டிருந்தார்.

வீட்டைக் கட்டி ஐம்பது வருஷங்கள் இருக்கும். நன்றாகச் செலவழித்திருந்தார்கள். சலவைக் கல்லால் இழைத்திருந்தார்கள். இந்தக் காலத்தில் அப்படி ஒரு வீடு கட்டுவதானால் இரண்டு லட்சங்கள்கூடப் போதாது.

நான் வந்த வேலை நான் எதிர்பார்த்ததை விடச் சிரமமாக இருக்கும்போல் தோன்றியது. ஒவ்வோர் அறையிலும் இருந்த வேலைப்



பாடுடன் கூடிய சாமான்கள் நல்ல விலை போகும். இரண்டு நாட்களாவது நான் தங்கி ஞல்தான் வந்த காரியம் முடியும்.

வீட்டுக்கு மின் வசதி உண்டு. ஆனால் வியாஜ்யம் தொடர்ந்து கொண்டிருந்தபோது "பில்" யார் கட்டுவது என்ற பிரச்னையில் எலெக்டிரிக் கம்பெனியிலிருந்து "ப்யூஸை"ப் பிடுங்கிக் கொண்டு போய்விட்டார்கள். கரியேறிய இரண்டு ஹரிக்கன் விளக்குகளைத் தவிர வேறு ஏதும் இல்லை. ஒன்று மருதாசலத்தின் வழித் துணைக்கு. இன்னொன்று வீட்டுக்கு.

இரவு ஒரு மணிக்கு மருதாசலம் புறப்பட்டார்.

"நீங்களும் என்னுடன் வாருங்கள் ! இரவு மணியக்காரர் வீட்டில் தங்கிவிட்டுக் காலையில் இரண்டு பேராகத் திரும்பலாம்!" என்றார். மருதாசலத்துக்கு ஐம்பது வயதுக்கு மேல் இருக்கும். நாட்டுப்புறத்து உடல் வாகு. கட்டுக் குலையாமல் இருந்தார்.

எனக்குச் சோம்பலாக இருந்தது. மணியக்காரர் வீடு இங்கிருந்து இரண்டு கிலோமீட்டராவது இருக்கும் என்று அவர் சொன்னபோது தயங்கினேன். எனக்கு அடித்துப் போட்டாற் போல் அசதி.

"நான் வரவில்லை. இங்கேயே தூங்கிக் கொண்டிருக்கிறேன். காலையில் வரும்போது கொஞ்சம் காப்பி மட்டும் எடுத்து வந்தால் போதும்....." என்றேன்.

"இங்கேயா தங்கப் போறீங்க ?" என்று அவர் வியப்புடன் கேட்டார்.

"ஆமாம்! ஏன்?"

"ஒன்றுமில்லை. நீங்கள் ஊருக்குப் புதிது. தனியாக இந்த வீட்டில்......"

"தனி என்ன தனி? கதவைத் தாழிட்டு விட்டுப் படுத்தால் நாளைக் காலையில் நீங்கள் கதவைத் தட்டின பிறகுதான் நான் எழுந்திருப்பேன். அத்தனை அசதி எனக்கு..."

"இல்லை..... மணியக்காரர் உங்களை எதிர்பார்த்து......"

"என்னை மன்னித்துவிடுங்கள்.... இன்று என்னால் ஒரு அடிகூட நகர முடியாது. காலையில் அவரைக் கட்டாயம் சந்திக்கிறேன்!" என்று நான் தீர்மானமாக மறுத்துவிட்டேன்.

அவர் ஒரு விளக்கை எடுத்துக் கொண்டு புறப்பட்டார். இன்னொரு விளக்கை நடுவில் தொங்கிய ஒரு கம்பியில் மாட்டினேன்.

முகத்தைக் கழுவிக் கொண்டேன். காலையில் நான் வருவேன் என்று மருதாசலம் சாப்பாடு வாங்கி வைத்திருந்தார். அதையே இரவு உணவாக்கிக் கொண்டேன்.

மணி எட்டு அடித்திருக்கும். பெஞ்சியில், "என் அப்பனே, ஷண்முகா, சுவாமிநாதா!" என்று நீண்ட ஒரு கொட்டாவி விட்டுப் படுத்துவிட்டேன். அந்த அசதியில் உடன் உறங்கியும் போய்விட்டேன்.

டொமரென்று யாரோ கதவைத் தட்டினார்கள். ரொம்ப நேரமாகத் தட்டிக்கொண்டிருப்பார்கள் போலத் தோன்றியது. மெதுவாக எழுந்திருந்தேன். சிறிது பண்ணி வைத்திருந்த விளக்கைத் தூக்கிக் கொண்டு பூட்டியிருந்த கதவைத் திறந்தேன். விளக்கை உயர்த்திப் பிடித்து வந்தது யார் என்று கவனித்தேன்.

முப்பது வயது மதிக்கத்தக்க ஓர் இளைஞனும் அவன் பின்னால் ஒரு பெண்ணும் நின்று கொண்டிருந்தனர்.

" மன்னித்துக் கொள்ளுங்கள் ! எங்கள் கார் அங்கே மரத்தில் மோதிவிட்டது !", என்றான் வந்தவன். அவன் காட்டிய திசையில் ஒரே இருள்தான் இருந்தது. கரியேறியிருந்த அந்த விளக்கின் மங்கிய ஒளியில் — என் கண்களில் இருந்த தூக்கக் கலக்கத்தில் — அருகில் இருந்தவர்கள் முகம் எல்லாம் சரியாகத் தெரியவில்லை....."

"ஐயய்யோ ! கார் மோதிவிட்டதா ?" என்று பதறினேன்.

"காருக்குத்தான் சேதம்.... எங்களுக்கு ஒன்றும் இல்லை. முன் விளக்குகள் இரண்டும் நொறுங்கிவிட்டன. இனிப் பிரயாணத்தைத் தொடர முடியாது. தயவுசெய்து இடம் கொடுத்தால் இந்த முன்னறையில் இரவுப் பொழுதைக் கழித்துவிட்டுப் போகிறோம்."

நான் ஒரு கணம் நிதானித்தேன். வந்திருந்தவர்கள் மரியாதைப்பட்ட மனிதர்களாகத் தெரிந்தார்கள். வீட்டிலிருந்த சாமான்களைத் தூக்க நான்கு பேராவது வேண்டும். எதையும் அங்கிருந்து எடுத்துப் போவது எளிதில்லை. இத்தனை நாள் பூட்டிக் கிடந்தபோது வராத திருடன் இப்போது தானா வரப் போகிறான் ? என்னிடம் இருந்த ரூபாய் மொத்தம் ஐம்பதுக்கும் குறைவு.

வந்தவர் மட்டும் தனி ஆளாக இருந்திருந்தால் திருப்பிப் போய்க் காரில் படுத்துக் கொள்ளச் சொல்லி இருப்பேன். கூட வந்தவள் ஒரு பெண் ஆயிற்றே. அவள் கைவளை ஓசையும் நின்ற தோற்றமும் என்னை அந்த மங்கிய ஒளியில்கூடக் கவர்ந்தன.

" சரி, வாருங்கள் !" எனக் கதவைத் திறந்துவிட்டேன்.

"நேராக இருந்த ஓர் அறைக் கதவைக் காண்பித்து, "நீங்கள் அங்கே தங்கலாம். காலையில் 'கேர்டேகர்' வருவார். உங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து தருவார் !" என்றேன்.

அவர்கள் அந்த அறைக்குள் போனார்கள். அரிக்கேன் லேட்டை மறுபடியும் கம்பியில் மாட்டிச் சிறிதாக்கினேன். அறையினுள் இருள் பரவியது.

படுக்கையில் திரும்பிப் படுத்து இரண்டு நிமிஷங்கள்கூட ஆகியிருக்காது. என் தலைமாட்டில் யாரோ நிற்பது தெரிந்தது.

" என்ன வேண்டும் ? குடிக்கத் தண்ணீரா ?" என்று எழுந்தேன்.

"இல்லை.... ஒன்றும் வேண்டாம். உள்ளே ஒரே புழுக்கம். அவள் மட்டும் அங்கே படுத்துக் கொள்ளட்டும்.... நான் இப்படி இந்த அறையிலேயே....."

" ஓகே !" என்று சொல்லிய நான் மீண்டும் படுத்துக் கொண்டு போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டேன்.

" என்ன ஸார் ! இந்தப் புழுக்கத்தில் இப்படிச் சட்டையையும் போட்டுக் கொண்டு மேலே போர்வையும் போர்த்தியிருக்கிறீர்கள்? என்னைப் பாருங்கள்.... நான் சட்டையைக் கழற்றினாலும் தெப்பமாக வியர்க்கிறது!" என்றார் அவர்.




எனக்கு வியர்க்கவில்லை. சொல்லப் போனால் சிலுசிலுவென்று காற்று வீசியது. "எனக்குச் சட்டை போட்டுக் கொண்டு தூங்கித்தான் பழக்கம் !" என்றேன் எரிச்சலுடன். மேலே பேசாமல் மறு பக்கம் திரும்பிப் படுத்து உறங்கிப் போனேன்.

**மீ**ண்டும் வாயிற் கதவை யாரோ தட்டினார்கள். திடுக்கிட்டு விழித்தேன்.

நன்றாக விடிந்துவிட்டது. அறையில் என்னுடன் படுத்து இருந்தவர்களைக் காணவில்லை. உள் அறையும் திறந்து கிடந்தது. அங்கேயும் அவர்கள் இல்லை.

வாயிற் கதவைத் திறந்தேன். மருதாசலம் தான் காப்பி பிளாஸ்குடன் நின்றிருந்தார்.

"சுகமாகத் தூங்கினீர்களா, ஸார் !" என்று கேட்டுவிட்டு என்னை ஏற இறங்கப் பார்த்தார்.

எனக்கு ஒரே குழப்பம். வந்தவர்கள் எங்கே போயிருப்பார்கள் ? வெளியே போயிருந்தால் வாயிற்கதவை எப்படி உட்புறம் அவர்கள் தாளிட்டிருக்க முடியும் ?

" என்ன அப்படிப் பார்க்கிறீர்கள் ?" என்று கேட்டார் மருதாசலம். நான் இரவு வந்து போனவர்களைப் பற்றிச் சொன்னேன்.

மருதாசலத்தின் முகத்தில் பெரும் திகில் பரவியது. அவர் உடல் நடுங்கியது.

"ஐயா.... ஐயா.... நீங்கள் பிழைத்தது பூர்வ ஜன்ம புண்ணியம். உங்கள் வீட்டுக்காரியின் தாலி பாக்கியம். வந்தது மனுஷங்க இல்லை.... இங்கே சுத்தற இரண்டு காத்துங்க....." என்றார்.

"என்ன சொல்கிறீர்கள், பெரியவரே ?" என்று திடுக்கிட்டுக் கேட்டேன்.

"ஆமாங்க, தம்பி! இந்த வீட்டைக் கட்டியவங்க இங்கே தங்கியதில்லை. மெட்ராஸ் பங்களாவிலேதான் இருப்பாங்க. இங்கே ஒரு காவல்காரன் மட்டும்தான் உண்டு. கண்ணாயிரம்னு ஒருத்தன் காவலுக்கு இருந்தான். நல்ல பையன். ஆனால் குடிப் பழக்கம் உண்டு. ஒரு நாள் ராத்திரி ஒரு ஆண் பிள்ளையும் பெண் பிள்ளையுமா அவங்க கார் நின்னு போச்சுன்னு இங்கே வந்தாங்க. இடம் கேட்டாங்க. கண்ணாயிரமும் சரி என்று இடம் கொடுத்தான். அந்தப் பெண்ணின் அழகு— இரவின் தனிமை — எல்லாம் கண்ணாயிரத்தை மிருகமாக்கிவிட்டது. அவளிடம் தகாதபடி நடந்துவிட்டான். தடுக்க வந்த அவள் புருஷனை ஒரே போடு — தீர்த்துவிட்டான். எல்லாம் அவன் போதையில் இருந்த போது நடந்தது. காலையில் அவன் கண் விழித்துப் பார்த்த போது அந்தப் பெண் அந்த அறையிலே தொங்கிக்கிட்டிருந்தா....."

"நிசமாகவா ?" என்றேன் நான் உணர்ச்சியற்றுப் போய்.

"மெய்தானுங்க.... ராத்திரியே சொல்லணும்னுதான் நினைச்சேன். ஆனா நீங்க அலுத்துப்போய் வந்திருக்கீங்க.... களைத்துப் போய்ப் படுக்க இருந்தீங்க.... நாம் ஒரு பீதியைக் கிளப்பி விடக் கூடாதுன்னு போனேன்....."

முகம் கழுவிக் கொண்டு காப்பி அருந்தும் போதுகூட என் முகத்தில் தெளிவில்லை.

"எத்தனை துல்லியமாகப் பேசினான்! 'புழுக்கமாக இருக்கிறது. சட்டையைக் கழற்றுங்கள்' என்றுகூடச் சொன்னானே !"

"சட்டையைக் கழற்றச் சொல்லியதா ? நல்ல வேளை.... நீங்க அதைச் செய்யலீங்க.... கழற்றியிருந்தீங்கன்னா நெஞ்சிலே ஒரு போடு. சாக அடிச்சு ரத்தத்தை உறிஞ்சி இருக்கும். இது வரைக்கும் இப்படி ரெண்டு பேர் மாண்டு போயிருக்காங்க.....யாரும் இங்கே ராத்திரி தங்கினது இல்லீங்க....."

"எனக்கு நம்பிக்கை இல்லை. நான் ஏதோ கனவுதான் கண்டிருக்க வேண்டும். சட்டை மேல் அடித்தால் நெஞ்சில் படாதோ ?"

குனிந்து என் சட்டையைக் கவனித்தேன். இரவில் சரியாகக் கவனிக்கவில்லை. ரயில் கரி திட்டுத் திட்டாகப் படர்ந்திருந்தது. கழற்றித் தோய்க்க வேண்டும் என்று எண்ணினேன். சட்டைப் பையில் தட்டுப்பட்டதைத் துழாவி வெளியில் எடுத்தேன்.

காய்ந்து போன இலைகளின் நடுவேயிருந்த செந்திலாண்டவன் விபூதிப் பிரசாதம் அது. நான் புறப்படும் போது செங்கமலம் கொடுத்தது. என் உடலெல்லாம் சிலிர்த்தது.

**கே**ட்டுக் கொண்டிருந்த என் உடல்கூடச் சிலிர்த்தது. டாக்டர் நீண்ட கொட்டாவி விட்டார். செட்டியார் எழுந்தார். "கடையைப் பூட்ட வேண்டும். நான் வரட்டுமா?" என்று விடைபெற்றுக் கொண்டார்.

நான் இன்ஸ்பெக்டர் வேதாஸ் முகத்தைப் பார்த்தேன். ''செட்டியார் சொன்னதை நீங்கள் நம்பவில்லையா?'' என்று கேட்டேன்.

''உண்மை அதுவல்ல என்று எனக்குத் தெரிஞ்ச பின்னர் எப்படி நம்ப முடியும்?'' என்று கேட்டார் அவர்.

நாங்கள் நிமிர்ந்து உட்கார்ந்தோம்.

''செட்டியார் போய்த் தம் முதலாளியிடம் கதையைச் சொல்ல, அவர் அந்த வீட்டைக் குறைந்த விலைக்குத் தள்ளிவிட்டார். வாங்கியவர் மருதாசலம்தான். எல்லாம் அவர் நடத்திக் காட்டிய நாடகம்தான். அந்த வீட்டுக்குக் கொல்லைப்புற வழி உண்டு. அதன் வழியாக வந்தவர்களை வெளியேற்றியவரும் அவர்தான்.''

''அந்த வீட்டின் மேல் அத்தனை மோகமா?'' என்று கேட்டார் டாக்டர்.

''இருக்காதா?.... பூட்டிக் கிடந்த அந்த வீடு அவருடைய கள்ள நோட்டு அச்சடிக்கும் வேலைக்கு எத்தனை உபயோகமாக இருந்தது? நாங்கள் அவரைப் பிடித்த போதுதான் எல்லாம் தெரிய வந்தது!'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''நாளைக்குச் செட்டியாரிடம் இதைச் சொல்லி அவர் முகம் போகும் போக்கைப் பார்க்க வேண்டும்!'' என்றார் போஸ்ட் மாஸ்டர் ராஜா முகம்மது.

''வேண்டாம்!'' என்றார் வேதாஸ். ''இந்தக் காலத்தில் செட்டியார் போல் தெய்வ நம்பிக்கை உள்ளவர்கள் தேய்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர் மனத்தில் உள்ள நம்பிக்கையை நாம் குலைக்க வேண்டாம்!'' என்றார்.

எங்களுக்கும் அது சரியாகவே தெரிந்தது.



## உழைப்புக்கு விழா

முன்னாள் முதலமைச்சர் திரு எம். பக்தவத்சலம் அவர்களின் எழுபத்தேழாவது பிறந்த தின விழா 16-10-73 அன்று மாலை சென்னை ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடந்தது. மத்திய அமைச்சர் திரு எச். என். பகுகுணா தலைமை வகித்தார். திரு பக்தவத்ஸலம் உழைப்பின் வடிவம் என்று அவர் பாராட்டினார்.

ஸ்ரீமதி எஸ். அம்புஜம்மாள், ருக்மிணி தேவி, வேலூர் நாராயணன், சாயி மாதா சிவபிருந்தா தேவி, பி. ஆர். பட்டாபிராமன், ம. ப. பெரியசாமி தூரன் முதலியவர்கள் பேசினர். ❀

## நடன விழா

நண்பர்கள் கலாசார மன்றத்தின் சார்பில் நடைபெற்ற நடன விழாவில் 5-10-73 அன்று கமலா - ராதா - வஸந்தியின் பரதநாட்டியத்துக்கு அமெரிக்க கான்சல் ஜெனரல் ஸ்ரீ ஜான் சவஸ் தலைமை வகித்துப் பாராட்டுரை வழங்கினர். ❀





## விண்வெளி விழா

1961ல் விண்வெளிப் பயணம் செய்த சிம்பான்ஸி குரங்கு இது. ஃபீடிங் பாட்டிலில் அது சாப்பிடுவது மருந்து அல்ல; விருந்து! அமெரிக்காவில் உள்ள (NASA) தேசிய விண்வெளிப் பயண நிர்வாக நிறுவனம் ஆரம்பமாகிப் பதினைந்து வருஷங்கள் பூர்த்தியானதை யொட்டி



விழா நடந்தது. அன்றையதினம் வாஷிங்டன் தேசிய மிருகக் காட்சி சாலையில் உள்ள இந்தக் குரங்குக்கு விருந்து வைத்தார்கள்! கிரேப் ஜூஸ் விருந்து! அதுவும் விண்வெளிக்குச் சென்று அருந்தும் விசேஷ திராட்சை ரசம். இது கெட்டியாக இருக்கும். தண்ணீர் சேர்த்து விண்வெளியில் அருந்துவார்கள். இக்குரங்குக்கு அது மண்வெளியிலேயே கிடைத்து விட்டது! ❀

# இன்ஸ்பெக்டர் விக்ரம்

கதை: அசித்மூர்தி

படம்: பிரதாப் முல்லிக்

14




சரணடைய வந்த லால்சிங்கை விக்ரம் ஊக்கினான்.



















லால்சிங் தன் துப்பாக்கியைப் பயன்படுத்து முன்னர் விக்ரமின் துப்பாக்கி இயங்கியது.






மறைந்திருந்த போலீஸ்காரர்கள் ஓடி வந்தனர்.













(முற்றும்)

லியூபா வார்டில் பணி செய்ய வந்த நாட்களில் நாங்கள் எல்லோரும் மிகுந்த குதூகலத்துடன் இருப்பது வழக்கம். அன்பு ததும்பத் துருதுருவென்று காலையில் அவள் மென்மையான காலணிகளை அணிந்து அரவமேயின்றிக் கதிரவனின் ஒரு கிரணம் போல் வளையவரும் போது அவளுடைய கன்னங்கள் குளிரால் செக்கச் செவேரென இருக்கும். சிரிக்கும் குழந்தைப் பார்வைக் கண்கள் ஆதுரத்துடன் ஜ்வலிக்கும். கட்டிலில் காலிழந்து கிடந்த மேஜர், "உன் கன்னங்கள் ரோஜாவைவிடச் சிவப்பானவை. அதற்காகவாவது நாங்கள் உயிர் பிழைத்து வாழ வேண்டாமா?" என்பார்.

அவள் குளிரால் விறைத்துப் போன விரல்களை ஊதிவிட்டுக் கொண்டு, "அதற்கு என்ன சந்தேகம்?" என்பாள்.

கைகளை முதுகுப் பக்கம் வைத்துப் பெரிய ஸ்டவ்வின் மீது அழுத்திக் கொள்வாள். அவளுடைய மெல்லிய வெண்மேனியில் குழந்தை சுபாவமும் ஈர்ப்பும் ததும்பும். கைகளுக்குச் சூடு காட்டிக் கொண்டே நிமிஷத்துக்கு ஆயிரம் வார்த்தைகளாகப் பொரிந்து கொட்டுவாள். காலையில் டாக்டர் செய்த 'கன்ஸல்டேஷன்' பற்றியும், ஈர விறகு என்ன ஆயிற்று என்றும், மதிய உணவு என்ன என்றும், முதல் நாள் சினிமாவைப் பற்றியும் பேசித் தள்ளுவாள். அப்போது முனகல்கள் நிற்கும். பிணியால் வேதனையுறும் முகங்கள் தெளிவடையும். நோயாளிகளின் கவலைகள் ஒழியும். முகங்களில் புன்முறுவல் உதிக்கும். பொதுவாக வார்டில் புத்துயிர் உருவாகும்.

எங்கள் எல்லோருக்கும் அவள் மீது பிரியம். நாங்கள் எல்லோருமே அவளைக் காதலித்தோம் என்று சொல்லலாம். ஆனால் இது சம்பந்தமாகப் பொறாமை வார்டில் நுழையக் கூடாது என்று தீர்மானம் செய்திருந்தோம். லியூபாவுக்கு ஓய்வு இருந்தபோது எங்கள்

ஒரு நாள் அவள் என்னோடு சீட்டாடும் முறை. நான் இரவு முழுதும் தூங்கவில்லை. எனக்கு ஒன்றுமில்லை என்று புன்முறுவலால் நான் பொய் சொன்னதை என் கண்கள் காட்டிக் கொடுத்துவிட்டன. இந்தப் பெண் எப்படித்தான் எங்கள் உள்ளங்களில் புகுந்து பார்க்கிறாளோ, தெரியவில்லை. அன்று அவள் சீட்டாட்டம் தொடங்கவில்லை. சீட்டுக்கள் அப்படியே கிடந்தன. எங்கள் வாழ்க்கையைப் பற்றி நாங்கள் ஒளிவு மறைவில்லாமல் பேசினோம்.

அவளுடைய கணவன் ஒரு டாங்கி காப்டன். மிகத் தைரியசாலி. அவனுக்கு ராணுவ விருது கிடைத்திருந்தது. அவன் பெயர் போரில் காணாமற் போனவர்கள் பட்டியலில் இருந்தது. அவன் விதியைப் பற்றிய செய்தி ஒன்றும் கிடைக்கவில்லை. கிட்டத்தட்ட ஒரு மாத காலம் அவள் உள்ளம் குமுறிக் கொண்டிருக்கையில் இரவு நேரங்களில், யாருக்கும் இடைஞ்சலாயிருக்கக்கூடாதென்று தன் அறைக்குப் போய் வாய்விட்டு அலறாமல் அழுதுவிட்டு விடிந்ததும் ஒளி வீசும் புன்னகையுடன் வார்டுக்கு வந்துவிடுவாள்.

அதற்கு முதல் நாள்தான் லியூபா முக்கியமான டாங்க் கமாண்டர் ஒருவரைச் சந்தித்திருக்கிறாள். அவர் அவள் கையைத் தம் கைகளுக்குள் பரிவுடன் பிடித்துக் கொண்டு சொன்னார்: "லியூபா! நான் உன்னை ஏய்க்க விரும்பவில்லை: பாஸ் எதிரிகளால் சூழ்ந்து கொள்ளப்பட்டான். அவனோடு இருந்த பலரும் தப்பித்துவிட்டனர். அவன் மட்டும் திரும்பி வரவில்லை."

அவர் அவள் கதறாமல் இருக்க அவள் கைகளை ஆதரவுடன் அழுத்தினார். "அமைதியாக இரு, லியூபா! அவன் திரும்பினாலும்

# மணமகள்

லியோனீட் ஸோபோலியேவ்

யார் ஒருவரிடமாவது உட்கார்ந்தாலும், காதில் கிசுகிசுத்தாலும், சீட்டு விளையாடினாலும், அந்த ஆளுக்கு அன்று வேதனை அதிகமாக இருப்பதால்தான் அவள் அருகில் இருக்கிறாள் என்று இருந்து விடுவோம்.

திரும்பலாம். இந்த நிலையில் காத்திருப்பது நல்லது என்று உனக்குத் தெரியும். இனிமேல் காத்தும் பயனில்லை என்று எனக்குத் தெரியும் போது நான் சொல்லுகிறேன்.''

அவளிடம் காணப்பட்ட மனோதிடத்தை அளவிட எண்ணியதுபோல் அவளைக் கவனித்தேன். அவள் துயரத்துக்குமுன்னால் என் துயரங்களை மறந்தேன். நோயாளிகளைத் தேற்ற அவள் கூறி வந்த ஆறுதல் மொழிகளைப் பற்றி என்னென்று சொல்ல? தன் மனத் துயரை வெளியில் சிறிதும் காட்டிக் கொள்ளாமல் இன்சொல் பேசி வந்தாள்.

நொண்டி மேஜர் ஒரு மூலையில் முனகினார். லியூபா துள்ளி அவரிடம் சென்றாள். அவளுடைய சொந்தத் துயரம் பறந்து விட்டது. அவள் கண்களின் உற்சாகம் மீண்டும் உதித்தது. ஆனால் வார்டில் வேறு ஒருவரும் அவள் துயரத்தை அறிந்திலர்.

சில நாட்களுக்குப் பிறகு என்னை வேறு ஓர் வார்டுக்கு மாற்றினார்கள். இரண்டு வாரங்கள் கழித்துத் திரும்பவும் எனக்குப் பரிச்சயமான பழைய வார்டுக்கே வந்து சேர்ந்தேன். பல நோயாளிகள் சென்று விட்டனர். புதிய நோயாளிகள் பலர் வந்திருந்தனர். என் படுக்கைக்கு அடுத்த படுக்கையில் ஏகப்பட்ட கட்டுக்கள் போடப்பட்ட ஓர் உருவம் கிடந்தது. அது ஒரு டாங்கிச் சிப்பாயின் உருவம். அவன் மார்பும் முகமும் எரிந்து போயிருந்தன. தலைமயிர், இமைகள், சருமம் எல்லாம் கருகிவிட்டிருந்தன. கரிய மூக்குக் கண்ணாடிகள் துருத்திக் கொண்டு நின்றன. கண்ணாடி வழியாக ஒளி பாயாது. கண்ணின் கருமணியில் கட்டின் துணி படாமல் கண்ணாடி காப்பாற்றியது. வாய்ப் புறம் மட்டும் துவாரம் விடப்பட்டிருந்தது. அதன் வழியாகத்தான் அவன் உணர்ச்சிகளுக்கு உயிரூட்டும் சொற்கள் வெளிவந்தன. நோயுடன் அவன் போராடிக் கொண்டிருந்தான். அவன்



ரேகா










வாழ விரும்பினன்; ஆனதால் பொறுமையாக அவன் வேதனைகளைச் சகித்துக் கொண்டிருந்தான்.

வார்டில் வேதனைச் சுமை பாரமாக அழுத்திக் கொண்டிருந்தது போல் ஓர் உணர்வு. போரில் புண்பட்டவர்களுள் ஒருவன் திடீரென்று வலி பொறுக்காமல் ஓலமிடுவான். இந்த ஓலத்துக்குப் பிறகும் வார்டில் அரவமின்றி ஆதரவு தருபவள் நுழையாததைக் கண்டு விரூபா அன்று பணி முறையில் இல்லை என்று தெரிந்து கொண்டேன். அன்று பென்யாவின் பணி முறையாக இருந்திருக்கலாம். அழகில்லாத அவள் நடு வயதினள், விரைவில் களைத்துப் போவாள். இரவில் அவள் ஸ்டவ் அருகில் படுத்துத் தூங்கியும் போவாள். நான் எழுந்து சிகரெட் பிடிக்கச் சென்றேன். நான் வருவதை அறிந்த அந்த டாங்க் படை வீரன் தண்ணீர் கேட்டான். நான் அவனுக்குத் தண்ணீர் கொடுக்கையில் எங்கேயாவது காயத்தில் பட்டு அவனுக்கு வலிக்கப் போகிறதே என்ற பயத்தில் நர்ஸை எழுப்ப யத்தனித்தேன். "அவளை எழுப்ப வேண்டாம்" என்றான் டாங்க் படை வீரன். "நீயே தண்ணீர் கொடு, போதும்" என்றான். வாயருகில் விடப்பட்டிருக்கும் துவாரம் வழியாகப் பாலாடையைப் பயன்படுத்தித் தண்ணீரை ஊற்றினேன். சிறிதளவு அவன் கட்டின்மேல் வழிந்தது. நான் தவற்றால் குழம்பிப் போய் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன்.

"பரவாயில்லே" என்று கூறி அவன் சிரித்தான். அவன் சிரித்தான் என்பதைக் கட்டுக்குள் இருந்து வெளிப்பட்ட திணறல் மூலம் தான் ஊகிக்க முடிந்தது. "அவளுக்குத்தான் தெரியும் ஊற்ற. மிகவும் ஜாக்கிரதையாக ஊற்றுவாள். அவள் யார்? எனக்காகக் காத்திருக்கும் மணமகள்!" என்றான்.

நாங்கள் பேசிக் கொண்டே போனோம். அவன் சொன்னது ஓர் அருமையான காதல் கதை. அவன் கண்ணால் பார்க்காத, பார்க்க இயலாத ஒரு பெண்ணைப் பற்றிப் பேசினான். அவளை "என் சின்ன ஆத்மா" என்று மனம் நெகிழ ருஷ்ய மொழியில் குறிப்பிட்டான். முதல் நாளே அவளை அவன் அப்படித் தான் அழைத்தானும். அவளிடம் ஆழ்ந்த அன்பை அவன் கண்டானும். அவனுடைய எரிந்த உதடுகளால் அவளுடைய பெயரைச் சொல்ல முடியாததால் அப்படி அவளை அவன் செல்லமாக அழைக்கிறானும்.

"அவள் விரூபாதான்" என்று நான் முடிவு செய்தேன். அந்த இனிமையான பெயர் அவனுடைய உச்சரிப்பழிந்த நாவிலிருந்து கர்ண கடூரமாகத்தானே ஒலிக்கும். விரூவா அல்லது விரூயா என்று தொனிக்கலாம்.

அவன் அவளைப் பற்றி மனம் நெகிழப் பெருமையுடன், ஆழ்ந்த காதல் வெறியுடன் பேசினன். அவன் மனத் திரையிலிருந்த அவளுடைய உருவுக்கு வார்த்தை வடிவம் கொடுத்துச் சித்திரித்த போது அவனுடைய கற்பனையை நான் பெரிதும் வியந்தேன். அவள் கேசம் இலேசாக, புசுபுசுவென்று இருக்கும், என்றும், அதை அவன் தீண்டியதாகவும் கூறினன். அவன் தர்மாமீட்டரின் கூடைத் தேடியபோது அவள் கேசம் அவன் கையில் தட்டுப்பட்டதாகவும், கூறினன். அவள் கரங்கள் மென்மையானவை, அழுத்தமானவை, கவனத்துடன் வேலைகள் செய்பவை. அந்தக் கரங்களைப் பிடித்துக் கொண்டு தன் வாழ்க்கையைப்பற்றியும், போர் என்பது கற்பனையில் எப்படிப் படுகிறதென்றும், உண்மையில் எப்படிப் பட்டது என்றும், டாங்கி வெடித்துச் சிதறியது பற்றியும், தன் தனிமை பற்றியும், தான் முடமாக வாழப் போகும் கோரம் பற்றியும் விவரித்ததாக ஒப்புக் கொண்டான்.

அவள் அவனுக்குக் கூறிய அனுகூலமான வார்த்தைகளையும், நம்பிக்கையூட்ட வழங்கிய அனுதாபமான பேச்சுக்களையும், மறுபடியும் அவனுக்குப் பார்வை வந்துவிடும் என்று அவள் அவனைத் தைரியப்படுத்தியதையும், அவன் திரும்பச் சொன்ன போது நான் கேட்டது விரூபாவின் குரலைத்தான். மறுநாள் அவன் உடல் நிலை எப்படி இருக்கப் போகிறது என்பது நிச்சயமாகத் தெரிந்துவிடும் என்று கெலிகித்தான். டாக்டர் மறுநாள் அவன் கண்ணாடிகளை நீக்கப் போகிறார். அவன் பார்வை திரும்பி வந்தாலும் வரலாம். அவன் அவனுடைய 'சின்ன ஆத்மாவிடம்' இதைப் பற்றிச் சொல்லவில்லை. 'பார்வை வராவிட்டால்?' என்ற சந்தேகம் இருந்ததால் அவளுக்கு ஏமாற்றத்தைக் தர அவன் விரும்பவில்லையாம். அவள் ஏன் வீணாக மனத்தைக் குழப்பிக் கொள்ள வேண்டும், பாவம். அவனைப் பொறுத்த வரையில் அவள் முகம் வசீகரமானது. அன்பு சொட்டுவது. அவன் ஒரு சிக்கலான ஆபிரேஷனுக்கு உடன்படச் சம்மதித்தால் அவன் புருவங்கள் நேராகிவிடும் என்று அவன் ஆலோசனை கூறினனாம். இதனால் ஏற்படக்கூடிய வேதனையை-அவனுடைய மானசிக மணப் பெண்ணுக்குத் தன்னை ஏற்றவனாக ஆக்கிக் கொள்ள வேண்டிய - பொருத்துக் கொள்ளத் தீர்மானித்தான். "சரி, என் மணமகளே!" என்றுகூடக் கூறியதாகச் சொன்னன். மணமகள் என்ற வார்த்தையை அவன் மிகவும் பெருமிதத்துடன் மொழிந்தான். அவள் கணவன் போரில் உயிரிழந்து விட்டானும். அவனும் அவளைப் போலத்

# Fleet

## ரீஃபில்

* மழமழப்பாக எழுதுவது
* சுத்தமாக எழுதுவது
* நீடித்து உழைப்பது



வாட்டுமல்
இண்டஸ்ட்ரீஸ்
பிரைவேட் லிமிடெட்
9-9ஏ, எஸ். பாட்கர் மார்க்,
பம்பாய்-400 036

Creative Unit-837-Tam.

1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D.கோபாலாசார்லுவின்

## ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.

## மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

Bensons-2141 TAM




உறவுக்குக் கை கொடுப்போம்:
உரிமைக்குக் குரல் கொடுப்போம்!

"இன்னும் இருபது வருஷம் கழிச்சு என்னைக் கல்யாணம் பண்ணிப்பியா மாட்டியா சொல்லு. இப்பவே கல்யாண மண்டபம் 'புக்' பண்ணி வைக்கணுமாமே?"



தனியாக இருந்து கொண்டு அவனைவிட அதிகத் துன்புறுகிறாளாம். "எனக்கு முகம் தான் போய்விட்டது. அவளுக்கோ கணவனே போய்விட்டான்" என்று துயரப்பட்டான் அவன். அந்த இரண்டு வாரங்களின் நீண்ட இரவுகளில் இருவரும் ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்து கொண்டனர். சாவு பின்தொடர்ந்த அவனுக்கு வார்டில் காதல் பிறந்து வாழத் தெம்பளித்தது. தற்கொலை செய்து கொள்ள எண்ணிய அவன் இப்போது வாழ ஆசைப்பட்டான். வருங்காலக் கனவு பலத்தில், உயிருக்கும், ஆரோக்கியத்துக்கும், இன்பத்துக்கும் மன்றாடுகிறான். தன்னை இந்தக் கோலத்துக்கு ஆளாக்கிவிட்ட விரோதிகளின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள அவன் வாழ விரும்புவதாகக் கூறினான்.

"உங்கள் முகம் எப்படி ஆகியிருந்தாலும் பாதகமில்லை. நான் உங்கள் முகத்தையா காதலிக்கிறேன், நான் காதலிப்பது உங்களை அல்லவா? அதைப் புரிந்து கொள்ளுங்கள்!" என்றாளாம் அவள். அவன் கண்ணீர் உகுத்தான்.

"இது உண்மையான காதலா, அல்லது இரக்கமிக்க ஆத்மா இரக்கத்தைக் காதல் என்று தவறாக நினைத்துக்கொண்டதோ? கணவனைச் சாகக் கொடுத்து விட்டுத் தனிமை பயங்கரத்தில் ஆழ்ந்து கிடக்கும் போது கணவனைப் போலவே சமரிட்ட டாங்கிச் சிப்பாயைக் கண்டதால் ஏற்பட்ட உணர்வுப் பெருக்கா? காலையில் நர்ஸுகள் மாறும் போது இந்தப் புதிருக்கு விடை காணலாம் என்று காத்திருந்தேன். விழுபாவின் ஒரு பார்வையிலேயே அவள் கண்கள் எல்லாவற்றையும் விளக்கிவிடுமே. இந்த எண்ணங்களுடன் நான் துயில்கிறேன்.

நேரம் கழித்து நான் கண் விழித்தேன். பரிச்சயமான வார்டு சூழ்நிலையிலிருந்து நர்ஸுகள் மாறிவிட்டனர் என்று புலப்பட்டது. ஆனால் விழுபாவைக் காணோம். டாங்கி சிப்பாயை அனுபி அவனுக்கு எப்படி யிருக்கிறது என்று விசாரித்தேன். "என் சின்ன ஆத்மா (என் ஆருயிர்) என் கட்டுக்களைப் பற்றி விசாரிக்க வந்தாள்" என்றான்.

அவன் பேச்சுத் தொனியிலிருந்து அவன் கட்டுக்களுக்குள் சிரித்துக் கொண்டதாக உணர்ந்தேன். "அவள் வெகு அழகாக இருக்க வேண்டும். உனக்கு அவளைத் தெரியுமா?" என்று வினவினான். "அவள் அழகிதான்; உண்மையிலேயே அழகிதான்" என்று பதில் அளித்தேன். அவன் முதல் தடவையாக இன்று தன் கண் கட்டுக்களை அவிழ்த்ததும் அவளைப் பார்க்கப் போவதாகச் சொன்னான். காலடிச் சத்தம் கேட்டுத் திடீரெனப் பேச்சை நிறுத்தினான். ரப்பர் பாதணியின் இலேசான சத்தம் என்றாலும் அவன் காதுகளைச் சுற்றியிருந்த கட்டுக்களையும் மீறி எப்படித்தான் அவன் அந்தச் சத்தத்தைக் கேட்டானோ? மனம் மெழுகாய் உருக, "அவளேதான்" என்றான்.

நான் திரும்பினேன். வந்தது பென்யா. அவள் வேலைநேரம் முடிந்தும் சற்றுத் தாமதித்திருக்கலாம். 'இவள் அவளல்ல' என்று நான் சொல்ல வாயெடுத்தேன். அதற்குள் பென்யா அவன் அருகில் உட்கார்ந்து கூறினாள்.

"என் அன்பான கோலென்கா! உன் மனதை இடம் முழுவதையும் திரட்டிக் கொள். கட்டுக்களை...." என்று வாக்கியத்தை முடிக்காமலே அந்த வீரனுடைய கரங்களைப் பற்றினாள். சாவைத் துணிந்து எதிர்த்துச் சமர் நடுவே நிற்கவல்ல அவன், கட்டவிழ்த்தால் வலிக்குமோ என்ற பயத்தில் அவளுடைய பிடியில் நடுங்கினான். இருவரிடையும் மௌனம் நிலவியது. அவள் கைகளை அவன் வருடினான்.

தினம் நாங்கள் பார்த்து அதிகம் மதிக்காமல் இருக்கும் பென்யாவின் மனத்தை சர்க்கா வதனத்தைக் கவனித்தேன். அந்த முகத்தில் இப்போது தனிப்பட்டதொரு களை கட்டியிருந்தது. அன்பின் ஒளியால் அழகு கட்டிய அந்த முகம் பூரண நம்பிக்கையுடன், ஒரு குவிய மாதின் பொலிவுடன் விளங்கியது.

அவள் கண்களில் நீர் முட்டியது. அவன் கைகளில் அவள் கண்ணீர் விழாதபடி தலையைத் திருப்பிக் கொண்டாள். இதை அவன் எப்படியோ புரிந்து கொண்டு விட்டான்.

"என் சின்ன ஆத்மாவே! என்னவாயிற்று உனக்கு?" என்று கேட்டான்.

அவள் கண்கள் நீரைப் பொழிந்தாலும், அவளே அவன் ஆறுதல் வார்த்தைகளாலும், வேடிக்கைப் பேச்சாலும் உற்சாகப்படுத்தினாள். பிறகு அவள் கண்கள் 'கதவுப்புறம் திரும்பின. கதவைத் திறக்கும் சப்தம் கேட்டுத் திரும்பினேன். 'ஸ்ட்ரெச்சர்' உள்ளே வந்தது.

டாங்க் ஸிப்பாவைத் தூக்கிச் சென்றனர். அவளும் பின்சென்றாள். நானும் செல்கிறேன். டாக்டர் அறை வாசலில் அவள் நின்ற போது அப்படியே துவண்டு போய் விட்டாள். அவளை நான் பிடித்துக் கொண்டேன்.

"அவன் பார்வை வருவதற்குள் இப்படிப் பரபரப்புடன் துடிப்பானேன்? அவனுக்குப் பார்வை வந்து விடும்" என்றேன்.

அவள் மிக்க மனவேதனையுடன் தலையை ஆட்டினாள், ஏதோ பெரிய நோவுக்கு உட்பட்டது போல. "பார்வை வந்தால் அவர் என்னைப் பார்த்து விடுவாரே... என் அழகை அவர் நேரே பார்த்து விட்டால் நான் அவருக்கு ஏமாற்றம் அளிக்க மாட்டேனா? என் கோர முகத்தைப் பார்த்து என்ன நினைப்பார்? அவர் என்னைப் பற்றி எப்படி எப்படியெல்லாம் கற்பனை செய்து பார்த்திருப்பார்... நான் ஓர் அழகி, ஒரு பேரழகி என்று எண்ணி வந்தாரே... நான் எப்படி அழகியாவேன்? நான் தொலைந்து விடுகிறேன்" என்று இரைந்து கூவிக்கொண்டு அவள் நெற்றியை அறையின் கதவில் அமுக்கிக் கொண்டாள்.

உள்ளேயிருந்து "முதல் பார்வைக்கு இது போதும். இன்னும் ஒரு வாரமாவது கண் கட்டிய இருட்டில் நீ இருப்பதுதான் நல்லது" என்று டாக்டர் சொன்னது கேட்டது.

பென்யாவின் முகம் அச்சத்தால் வெளிறியது. உடனே அவள் வெளியேறிவிட்டாள். இதற்குப் பிறகு பென்யாவை ஒருவரும் ஆஸ்பத்திரியில் பார்க்கவேயில்லை. பிற்பாடு நாங்கள் கேள்விப்பட்டோம், அவள் தன் சொந்த ஊருக்குச் சென்றுவிட்டாள் என்று.

— "தமிழாக்கம்: 'ஜான்'




அமரர் கல்கி இறுதி மூச்சு வரை எழுதி அமரரான இடம் அடையாறு. இந்த அடையாற்றையும் மயிலாப்பூரையும் இணைக்கும் புதிய பாலத்துக்குப் பேராசிரியர் கல்கிக்கு ஆசிரியராக இருந்த திரு.வி.க. அவர்களது பெயரைச் சூட்டியிருக்கிறார்கள். ரொம்பப் பொருத்தம்தான்.

அடையாறுநதி தனது பாதையை மாற்றிக் கொண்டு அடையாறு பக்கம் நிலத்தைப் பறித்ததோடு பழைய பாலத்தையும் அரித்துச் சாப்பிட்டுவிட்டது. கடலருகே இருக்கிறதல்லவா? அரிப்பு அதிகமாய்த்தான் இருக்கும். 1840–42ல் கட்டப்பட்ட பாலம் 1967ம் ஆண்டு பலவீனப்பட்டு, இரும்பு 'எல்' கர்டர்களால் அதைத் தூக்கி நிறுத்தினார்கள். இதனால் குறுகலான அந்தப் பாலத்தின் அகலம் மேலும் குறைந்துவிட்டது. மயிலாப்பூர்–அடையாற்றுப் போக்குவரத்து எத்தனை நாட்களுக்கு இதில் சிக்கிச் சிரமப்பட முடியும்? சென்னை நகரசபை சார்பில் புதிய பாலம் கட்டும் பணியைப் பொதுப்பணித் துறையினர் ஏற்று, 950 மெட்ரிக் டன் இரும்பு, 2500 மெட்ரிக் டன் சிமெண்ட், 482 'பைல்' அஸ்திவாரங்கள் இட்டுத் திரு வி. க. பாலத்தை உருவாக்கியிருக்கிறார்கள். 1025 அடி நீளமுள்ள இந்தப் பாலம் சென்னை நகரத்திலே 'பெரிய பாலம்' என்ற புகழைப் பெறுகிறது. நான்கு வாகனப் பாதைகளும், பாதசாரிகளுக்கும், சைக்கிள் சவாரி செய்வோருக்கும் தனிப் பாதைகளும் கொண்டு 26 அடி அகலம் படைத்தது இந்தப் பாலம். முதல்வரால் திறந்து வைக்கப்பட்ட இந்தப் பாலம் முந்நூறு வேலை நாட்களில் முடிந்தது. 'பைல்' அஸ்திவாரத்திலும் மிச்சப்படுத்தப்பட்ட இரண்டு லட்ச ரூபாயைப் பாலத்தைக் காக்கவே பயன்படுத்தியுள்ளார்கள். அதாவது உப்பு நீர் அதிகமுள்ள அடையாறு 'பைல்' அஸ்திவாரத்தை அரிக்காமல் காக்கச் சுவர் எழுப்பி யிருக்கிறார்கள். பாலத்தின் தொடக்கத்தில் மகாபலிபுரப் பாணி யாளிகள் காக்கின்றன. ஜனாதிபதி தங்கப் பதக்கம் பெற்ற சிற்பி ஜெயராம் நாகப்பா இந்தப் பிரும்மாண்டமான யாளிகளைத் தயாரித்தளித்த பெருமையைப் பெறுகிறார்.

திரு வி. க. பாலத்தை 58 லட்சம் ரூபாய்ச் செலவில் உருவாக்கக் கண்டிராக்ட் எடுத்தவர் நேஷனல் கம்பெனி முனுசாமி முதலியார். இட்டமிட்ட தொகைக்குக் குறைவாகவே செலவழித்துத் திட்டமிட்ட காலத்துக்கு முன்னதாகவே முடித்து விட்டதற்காக அவரை எத்தனை பாராட்டினாலும் தகும். இக் காலத்தில் இப்படி ஒரு கண்டிராக்டர் நடந்து கொள்வது அபூர்வமல்லவா?

– பி. எஸ். எம்

# நவ யுக மிர்ராபோ ராணி

நீங்களும் மிர்ராபோ ராணியாகத் திகழ வேண்டுமா? உங்களுக்காகவே மிர்ராபோ ஃபுல் வாயில் புடவைகள். 2 120 x 2/120. வாஷ் அன் வேர்.

இதர தயாரிப்புகள்:

ஸ்டேலாங்கர்,
ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங்குகள்,
எலகன்ஸா சூட்டிங். லவ்லின் ஷர்ட்டிங்,
சில்வர்லைன், சில்வர்கிங் வேஷ்டிகள்,
மல், காடா.

**தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்**

மார்க்கெட் செய்பவர்கள்:
வெங்கடேஷ் வஸ்திராலயா

# மிர்ராபோ

ஃபுல் வாயில் புடவைகள்

இள நங்கைப் பருவம்,
முழுமை உருவம்
பெற்றுத் திகழ மிர்ராபோ




ADVAVI-CCM-173A

# ஞானக்குயில்

## 30. கந்தகக் கனிஜ கோளம்!

ஒரு தட்டில் பூரி, கிழங்கு, பாம் பழம் ஆகிய வற்றைக் கொண்டு வந்து மேசையின் மேல் வைத்தாள் மனோகரி.

அவற்றைப் பார்த்த சேதுபதி, ''என்னம்மா இது, சாமியார்கள் சாப்பிடறதுகளைக் கொண்டு வந்திருக்கிறே?'' என்று சிரித்தவாறு கேட்டார்.

''உங்களுக்கு இந்த உணவுதான் ரொம்பப் பிடிக்கும்னு அம்மா சொன்னாங்க'' என்றாள் மனோகரி புன்னகையுடன்.

''அதெல்லாம் அந்தக் காலம் குழந்தே!''

''இப்போ உனக்கு எது பிடிக்கும்?'' என்று பரிவுடன்வினவினார் வேதமூர்த்தி.

''கோதுமை ரொட்டி, சோள அடை கேப்பைக் களி, சிக்கன் ரோஸ்ட், மட்டன் கீபிரை, பாய்ல்டு முட்டை!''

அவர் விளையாட்டுக்குத்தான் இப்படிச் சொல்கிறாராக்கும் என்று நினைத்த மனோகரி சிரித்துக் கொண்டே அங்கிருந்து போய்விட்டாள். சேதுபதி வேண்டா வெறுப்புடன் இரண்டு வாழைப் பழங்களை உரித்துப் போட்டுக் கொண்டு பாலைப் பருகினார். உடனே ஏதோ ஒன்றை அவசரமாக நினைத்துக் கொண்டவர் போல் தமது ஜிப்பா ஜேபியிலிருந்து சிகரெட் பாக்கெட்டையும் தீப்பெட்டியையும் எடுத்தவாறு, ''நீ இப்போ சிக்ரெட் குடிக்கிறது உண்டா வேது?'' என்று கேட்டார்.

'இல்லை' என்பது போல் மெல்லத் தலையாட்டினார் வேதமூர்த்தி. ''முப்பது வருஷங்களுக்கு முன்னாலே நாம் இருவரும் திருச்சி ஜெயிலில் இருந்தபோது என்னைச் சிகரெட் பிடிக்க வேண்டாம்னு சொல்லிக் காந்திஜியின் பேரால் சத்தியம் வாங்கினயே, ஞாபகமிருக்குதா? அப்போ அந்தப் பழக்கத்தை விட்டது தான்; அதுக்கப்புறம் அதைத் தொடறதே இல்லை.''

''நான் இப்போ நிறைய சிகரெட் பிடிக்கிறேன் வேது! ஒரு நாளைக்கு முப்

**ஜெகசிற்பியன்**

பது சிகரெட்டுகளுக்கு மேல் ஆகிறது!'' என்று சொல்லிக் குறும்பாகச் சிரித்தார் சேதுபதி.

பதில் ஏதும் கூறாமல் மென்னகை புரிந்தார் வேதமூர்த்தி.

''இன்னொரு விஷயத்தையும் கேட்டுக் கொள்! நான் வெறிநீரும் பருகக் கத்துக்கிட்டேன்.''

''வெறி நீரா? அது என்ன?''

''தமிழக அரசின் ஆட்சித் துறைச் சொல்லகராதியை எடுத்துப் பார்; தெரியும்...''

''வேணும் சேது! இப்போ ஒவ்வொரு மனுஷனையும் புரிஞ்சுக்கிறதுக்கே — அவனை அர்த்தப்படுத்திக்கிறதுக்கே—ஓரோர் அகராதி தேவைப்படுது; அதுக்கே வாழ்நாளில் முக்கால்வாசியைச் செலவிட வேண்டியிருக்குது. அதோடுகூட இந்த 'பார்டனை'யும் சேர்த்துக்க வேணும்னு நினைக்கிறேன்.''

வேதமூர்த்தியின் 'அடிவெட்டை'ப் புரிந்து கொண்டவர்போல் புன்னகை பூத்த சேதுபதி, ''நீ ஏன் பிறத்தியானைப் புரிஞ்சுக்கப் பிரயத்தனப் படறே?'' என்று கேலியாகக் கேட்டார்.

''நான் வாழ வேண்டியிருக்குதே!''

''வாஸ்தவம். முதலாளித்துவ சமூக அமைப்பில் தனி மனிதனுடைய வாழ்க்கை அப்படித்தான் இருக்கும். இதில் ஆச்சரியப்பட ஒண்ணுமில்லை.''

''என்னது! இப்போ நீ வெறிநீர் பருகிவிட்டு வரவில்லையே?''

''அதெல்லாம் இல்லை; சுத்தமாகத் தான் வந்திருக்கிறேன்.''

''அதாவது அது அசுத்தம்னு உனக்கே புரியுது!'' என்று சொல்லிச் சிரித்த வேதமூர்த்தி, ''நான் ஏன் பிறத்தியாரைப் புரிஞ்சுக்க முயற்சி பண்றேன்னு கேட்கிறயா? உதாரணத்துக்குச் சொல்றேன். என் பெண்டாட்டியைப் புரிஞ்சுக்கிட்டாத்தான் அவள் சமைச்சுப் போடற உணவைப் பயமில்லாமல் சாப்பிட முடியும், இல்லையா?'' என்றார் குத்தலாக.

''நீ ஏன் உன் பெண்டாட்டிதான் சமைக்கணும், அவள்தான் உனக்குப் பரிமாறணும்னு எதிர்பார்க்கிறே? நீயே சமைக்கிறது, நீயே எடுத்துப் போட்டுச் சாப்பிடறது! அது உன்னாலே முடியலேன்னா சமைக்கிறவனை நம்பு! அவளைப் புரிஞ்சுக்க முயற்சி பண்ணாதே! அதாவது, அவள் சமைச்சுப் போடப் பிறந்தவள், நீ சௌக்கியமா உட்கார்ந்து சாப்பிடப் பிறந்தவன் என்கிற பூர்ஷ்வா மனப்பான்மையோடு — அவள் உனக்குச் சோற்றிலே விஷம் வைப்பாளா, வைக்க மாட்டாளா என்கிற பயத்தில் — அவளைப் புரிஞ்சுக்க முயலாதே என்கிறேன்! ஆனால் முதலாளித்துவ சமூக அமைப்பில் வாழற எந்தத் தனி மனிதனிடமும் இம்மாதிரியான பயங்கள், இதுகளைப் போக்கிக்கொள்கிறதுக்கு ஆன முயற்சிகள் இருந்துக்



கிட்டேதான் இருக்கும். இதைத்தான் நான் முன்னே சொன்னேன்.''

''அப்படீன்னு, முதலாளித்துவ சமூக அமைப்பு அழிஞ்சு, சமதர்ம சமுதாய அமைப்பு உண்டாகிடுச்சுன்னு, அதிலே எந்தத் தனிமனிதனுக்கும் இதுபோன்ற பிரச்னைகள் இருக்காதுன்னு சொல்றயா?''

''இருக்கும். ஆனால் அதுகளுக்காக அப்போ கலாசாரப் புரட்சின்னு ஒண்ணு ஆரம்பமாகும்.''

''ஓ.... புரிஞ்சுக்கிட்டேன். புரிஞ்சுக் கிட்டேன்!''

''என்ன புரிஞ்சுக்கிட்டே?''

''நீ யாருங்கிறதை இப்போ நல்லாப் புரிஞ்சுக்கிட்டேன்.''

''பார்த்தியா? அகராதி இல்லாமலே என்னை உனக்குப் புரிய வைச்சுட்டேன், பார்! ஆனாலும் இப்போ நீ புரிஞ்சுக் கிட்டது என்னை இல்லே; இந்த நாட்டின் எதிர்கால மனிதன் ஒருத்தனைத் தான் இனம் கண்டுக்கிட்டே.''

''ஓகோ! அந்த எதிர்கால மனிதன் எங்கேயிருந்து வந்து குதிக்கப் போகி றானாம்?''

''துப்பாக்கி முனையிலிருந்து!'' என்று ஒருவித ஆவேச மகிழ்ச்சியுடன் எதிரேயிருந்த பிரம்பு மேசையை ஓங்கி ஒரு குத்துக் குத்தினார் சேதுபதி.

வேதமூர்த்தி சற்று நேரம் அமைதியாக அவரையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு மிகுந்த துயரம் தோய்ந்த கசந்த குரலில், ''காந்தி என்ற ஒரு யுகப் பேரொளியில் குளிக்கும் பேறு பெற்றதால் எத்தனை எத்தனையோ கூழாங்கற்கள் முத்துக்களாகவும், வைரங்களாகவும், மாணிக்கங்களாகவும், மரகதங்களாகவும் மாற்றம் அடைந்ததை நான் கண்கூடாகப் பார்த்திருக்கிறேன். அவற்றில் சில, இவ்வுலகில் அபூர்வமாகக் காணக் கிடைக்கக் கூடிய சந்திரகாந்தக் கற்களாக உருவாகி ஒளியுமிழ்ந்ததையும் கண்டிருக்கிறேன். அப்படிப்பட்ட ஒரு சந்திரகாந்தக் கல் இப்போது விஷத் தீயைக் கக்கும் பயங்கர கந்தகக் கனிஜக் கோளமாக உருமாற்றி விட்டிருப்பதையும் காண்கிறேன். இதைவிடத் துரதிர்ஷ்டம் வேறென்ன இருக்கக் கூடும்?'' என்றார் நீண்டதொரு பெருமூச்சுடன்.

சேதுபதி இதைக் கேட்டு அலட்சியமாகச் சிரித்தார். ''நல்லாப் பார்த்துக்கோ, வேது! ஆனால் இதற்காக நான் வெட்கப்படுவேன்னோ, வேதனைப்படுவேன்னோ மட்டும் கனவிலும் கருதாதே!''

''இம்மாதிரி நீ ஏன் ஆனாய் என்கிறதுக்குக் காரணத்தையாவது நான் அறியலாமா?'' என்று மென்மையான குரலில் வினவினார் வேதமூர்த்தி.

''ஹூம்! காரணமா? அதைச் சொல்ல ஆரம்பிச்சேன்னா என்னைவிட ரொம்பவும் மோசமான ஒரு கந்தகக் கனிஜக் கோளமாக நீ உருமாறி விடுவே, வேது!'' என்றார் சேதுபதி சிரித்துக் கொண்டே. ஆனால் அவர் முகம் திடீரெனக் கோபத்தால் சிவந்து பழுத்தது. தம்முள்ளே கொதிக்கும் ஆவேசக் கனலையும், உணர்ச்சித் துடிப்பையும் அடக்கிக் கொள்ள முயல்பவர் போல், அப்படியும்



இப்படியுமாக நெளிந்து நிமிர்ந்தான்: — ''காரணம் வேணுமாம் காரணம்! பல்லாண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த இந்தப் பாரதநாடு விடுதலை பெற வேணுமென்கிறதுக்காகத் தங்கள் உடல், பொருள், ஆவி மூன்றையும்பணய மாக வைச்சு லட்சோப லட்சம் ஏழை எளிய மக்கள் பாடுபட்டாங்களே, அதெல்லாம் எதற்காக? சுதந்திரம் கிடைச்சதும், தங்கள் வாழ்வு மலர்ந்துடும், சுகபோகங்களெல்லாம் வந்து குவிஞ்சுடும்; கொள்ளை கொள்ளையாக இன்பங்களை அனுபவிக்கலாம்னு அவங்க நினைச்சாங்களா? எதிர்பார்த்தாங்களா? இல்லை. வேறே எதற்காக அத்தனை பாடும் பட்டாங்க? தங்கள் தலைமுறைக்குப் பின்னால் வரப்போகிற ஒரு புதிய தலைமுறைக்காகத்தான் அவ்வளவு தியாகங்களையும் அவங்க செய்தாங்க! தங்களுடைய அன்புச் செல்வங்கள், அருமைப் பிள்ளைகள், இந்தச் சுதந்திர மண்ணிலே பசி பட்டினி இல்லாமல், வறுமைக்கு இரையாகாமல், மானத்தோடு, மரியாதையோடு, கண்ணியத்தோடு வாழணும்னு நினைச்சு, வாழ்வாங்கன்னு எதிர்பார்த்தே அவ்வளவு பாடுகளையும் பட்டாங்க. ஆனால் அந்த இளைய தலைமுறை இன்னிக்கு இருக்கிற நிலைமை என்ன? தங்கள் அறிவின் சக்தியையும் உடலின் வலிமையையும் வழிச்சுக் கொட்டி, இந்த நாட்டை ஒரு பூலோக சொர்க்கமாக்கத் துடிச்சுக்கிட்டு இருக்கிற அந்த இளங் காளைகளின் கதி எப்படி இருக்குது? விடிஞ்சால் சிங்கிள் டீக்கு வழி என்னன்னு ஏங்கி நிற்கிறாங்களே! இதுக்கெல்லாம் காரணம் என்னங்கிறதைக் கண்டுபிடிக்க முயற்சி பண்ணுவேது! அப்புறம், நேத்திக்குச் சந்திர காந்தக் கல்லாய் இருந்தது இன்னிக்குக் கந்தகக் கனிஜக் கோளமாக ஏன் உருவாச்சுங்கிறதுக்குத் தன்னாலே காரணம் புரிஞ்சுடும்.''

''உன் அளவில் இல்லாவிட்டாலும் ஓரளவாவது இதற்கான காரணங்கள் எனக்கும் தெரியும் சேது! ஆனால்....''

''ஆனால் என்ன? ஆண்டாண்டு காலம் நம்மை அடிமைப்படுத்தி வைச்சிருந்த வெள்ளைக்காரனிடமிருந்து விடுதலை வாங்கறதுக்காக அகிம்சை என்ற ஆயுதத்தை ஏந்திப் போராடி வெற்றி கண்டவங்களில் ஒருவனான நான், சுதந்திர இந்தியாவில் தோன்றியிருக்கும் இந்த இளம் தலைமுறையின் வாழ்க்கைப் பிரச்னைக்குப் பரிகாரம் காண மட்டும் வெடிகுண்டையும் துப்பாக்கியையும் தூக்க நினைக்கிறது ஏன் என்று கேட்கிறாயா?''

''ஆமாம்...''

''வெள்ளைக்காரன் நம்மை அடிமைப்படுத்தி வைச்சிருந்தாலும் அவன்கிட்ட கொஞ்சம் மனச்சாட்சி இருந்தது; நியாயத்துக்கும், தர்மத்துக்கும், சத்தியத்துக்கும் ஓரளவாவது பயந்து மதிப்புக் கொடுக்கிறவனாக இருந்தான். அதனால் காந்தி என்கிற ஒரு மகா சக்தி



வழங்கின அஹிம்சை என்கிற ஆயுதத்தைக் காட்டி அவனைப் பணிய வைக்க நம்மால் முடிஞ்சது. அவனும் அதற்குக் கட்டுப்பட்டுச் சுதந்திரத்தைத் தூக்கிக் கொடுத்துவிட்டுக் கப்பலேறினான். ஆனால் நாம் அப்படி வாங்கிக் கொடுத்த சுதந்திரத்தாலே நம்மை வாழ வைக்கிறேன்னு வந்து உட்கார்ந்திருக்கிற உள்ளூர்க் கும்பல், மனச்சாட்சின்னா கிலோ என்ன விலைன்னு கேட்குதே! நியாயம், தர்மம், சத்தியம் எல்லாம் இந்தக் கும்பலுக்குக் கிள்ளுக்கீரையாக இருக்குதே! இப்படிப்பட்ட நாசகாரக் கும்பல்கிட்டப் போய் அஹிம்சை பேச முடியுமா? அந்தப் பாஷை அதுக்குப் புரியுமா? புரியாது. ஏன்னா, நமக்கு முன்னாடி அது அஹிம்சை, அஹிம்சைன்னு கூப்பாடு போட்டு, அதையே ஒரு கேடயமாக்கி அதிலே ஒளிஞ்சுக்குதே! இந்த அயோக்கியக் கும்பலைச் சேர்ந்த ஒவ்வொருத்தனும் தன்னை அஹிம்சாவாதின்னு பறைசாற்றிக்கிறான். கொஞ்சம் ஏமாந்தால் தன்னையே காந்தியின் மறுபிறப்புன்னு கூடக் கூசாமல் மார் தட்டிச் சொல்லிக் கொள்கிறான். இம்மாதிரி காந்தியத்தையே 'கய்மா' பண்ணிச் சாப்பிட்டுக்கிட்டிருக்கிற இந்தக் கும்பல் கிட்டப் போய் என்னைச் சாத்வீகப் போராட்டம் நடத்தச் சொல்றயா? அன்னிக்குக் காந்தியவாதியாய் இருந்த ஒருத்தன் இன்னிக்கும் தன்னைக் காந்தியவாதின்னு சொன்னான்னா அவன் காந்தியத்தின் பேரால் காசு அடிச்சவனாகத்தான் இருப்பான்; அப்படி அடிக்கச் சேர்த்த காசுக்குப் பாதுகாப்பாகவே காந்தியத்தை ஒரு கவசம் ஆக்கிக்கிறான். காந்தியத்தின் பேரால் காசை மட்டுமல்ல; வேறு எதையுமே கனவிலும் நினைக்காத ஒவ்வொரு காந்தியவாதியும் இப்போ என்னைப் போல்தான் இருக்கிறான், இருப்பான்.''

''சரி; உன்னுடைய இந்த வாதம் நியாயம் என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் இதற்காக, நிலப் புரட்சி என்கிற பேரில் விவசாயிகளையும் வேலையின்மை என்கிற பேரில் படிச்ச வாலிபர்களையும் தூண்டி விட்டு நாட்டிலே கொலையும், கொள்ளையும் நடத்தச் செய்து விட்டால் மட்டும் எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்து விடுமா? தீர்ந்து போகும்னு நீ நம்பறயா?''

சேதுபதி அவரைப் பயங்கரமாக விழித்துப் பார்த்து விட்டு அடித்தொண்டையில் கரகரத்தார்: ''பிரச்னைகள் தீருமோ, தீராதோ, எங்களுக்கு அதைப் பற்றி அக்கறை இல்லை. ஆனால் ஒன்னை மட்டும் நாங்கள் உறுதியாக நம்பறோம். அது என்னன்னா, ஜாதி வெறியும் மத வெறியும் தலைக்கேறிய கூட்டம் ஒரு பக்கம், கட்சிவெறி பிடித்த சந்தர்ப்பவாதக் கூட்டம் இன்னொரு பக்கம், வாயளவில் சமதர்ம சோஷலிஸம் பேசும் திரிபுவாதிகள் கூட்டம் இன்னொரு பக்கம் — ஆக இப்படிச் சேர்ந்த ஒரு முக்கூட்டுக் கும்பல், இந்த நாட்டின் பல கோடி மக்களுடைய வாழ்க்கையையும் சுரண்டிச் சூறையாடிக் கொழுத்துக்கிட்டு இருக்குது. அப்படிக் கொழுத்துக்கிட்டே அது தன்னைக் காப்பாற்றிக் கொள்கிறதுக்காக ஏதேதோ உத்திகளைக் கையாண்டு தினந் தினம் பல மாயாஜால வித்தைகளை நடத்திக் காட்டி வருது. தங்கள் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையை இழந்துவிட்ட ஒவ்வொரு தேசிய வர்க்கமும் தனக்குரிய உரிமையையும் கடமையையும் மறந்து, அந்த நாசகாரக் கும்பல் காட்டும் குறளி வித்தைகளில் மயங்கி, மூச்சுத் திணறி அதன் பக்கமாய்ச் சாய்ந்துக்கிட்டே வருது. அதாவது, ஏமாற்றப்படும் கும்பல் ஏமாற்றுகிற கும்பலுக்கு ஜால்ரா தட்டி ஸ்துதி பாட ஆரம்பிச்சுட்டது. எனவே, ஏமாற்றுகிறவனை உதைப்பதற்கு முன்னால் ஏமாறுகிறவனை உதைக்க வேண்டும். இதையெல்லாம் உத்தேசித்துத்தான் ஆயிரத்துக்கு ஒண்ணு, லட்சத்துக்கு ரெண்டு என்கிற கணக்கிலாவது மானம், ரோஷம், சூடு, சொரணையுள்ள சில விஷப் பாம்புகளை உருவாக்கி நாட்டிலே உலவ விட்டு வரோம். உன்னுடைய பாஷையில் சொல்லணும்னா, இதுகளுக்குப் பேர் கந்தகக் கனிஜக் கோளங்கள்! இம்மாதிரி சில விஷப் பாம்புகள் இருக்குது என்கிற பயத்திலாவது அந்த எத்துக் கும்பல் கொஞ்சம் நிதானப்பட்டு நெஞ்சில் கை வைச்சுப் பார்த்து நடக்காதா என்கிற நப்பாசை; இதைத் தவிர இப்போ எங்களுக்கு வேறே எந்த நோக்கமும் இல்லே. புத்தி இருந்தும் முட்டாள்களாக வாழறதில் சுகம் காணுகிற — அறிவு இருந்தும் அறியாமைக் கதகதப்பில் குளிர் காய்கிற —ஒரு நாட்டின் மக்களிடையே புரட்சியைத் தோற்றுவிப்பது அவ்வளவு இலேசில்லே என்பது எங்களுக்குத் தெரியும்.''

பேச்சை நிறுத்திவிட்டுக் கடகட வென்று சிரித்த சேதுபதி மீண்டும் சொன்னார்: ''இப்படியெல்லாம் கொடூரமாகச் சிரித்தும் செயல்பட்டும் வருகிற எங்களை நீ வன்முறையில் நாட்டம் கொண்ட கும்பல் என்றும், தேச விரோத தீய சக்திகள் என்றும் வெகு சுலபமாகப் பட்டம் கட்டி விடலாம். சுதந்திரப் போராட்ட காலத்தில் கூட அந்நிய ஆதிக்கத்தை எதிர்க்க வெடி

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*




**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**



**The Illustrated Weekly of India**

குண்டுகளையும் துப்பாக்கிகளையும் மட்டுமே நம்பிய ஒரு கூட்டம் இருந்தது என்பது உனக்கு நினைவிருக்கிறதா? மகாத்மா காந்தியின் சாத்வீகக் கொள்கையில் நம்பிக்கை வைக்காத அவங்களையும் இப்படித்தான் அன்னிக்குப் பழிச்சும் இழிச்சும் பேசினாங்க. ஆனால் இன்னிக்கோ அவங்களையெல்லாம் மாபெரும் தேசபக்த வீரர்கள் என்று நாடு கொண்டாடுது; சிலை வைக்குது; சின்னம் எழுப்புது; தபால் தலை போடுது! ஒரு தேசத்து மக்களை அடிமைப்படுத்தி ஆள்கிறவன் மட்டும்தான் கொடியவனா? தன் சொந்த நாட்டு மக்களை ஏமாற்றி வஞ்சித்து வறுமைக் குழியில் தள்ளி வதைபடச் செய்யறவன் கொடியவன் இல்லையா? மண்ணுக்காகக் குண்டை எறியறவன் தேசபக்தன், மனித வயிற்றுக்காகத் துப்பாக்கியைத் தூக்குகிறவன் பயங்கரவாதியா? மனித குலத்தை நாங்கள் ஒரே கண்ணோட்டத்துடன்தான் பார்க்கிறோம். எங்கெங்கு மனித குலம் ஏமாற்றப் படுகிறதோ, சுரண்டப் படுகிறதோ, வஞ்சிக்கப்படுகிறதோ, கைவிடப்படுகிறதோ அங்கெல்லாம் நாங்கள் தோன்றுவோம்; அவற்றுக்குக் காரணமானவர்களையெல்லாம் அழிப்போம். எங்களுக்குத் தேசபக்தி இரண்டாம் பட்சம்தான்; மனித பக்தியே எங்களின் உயிர் மூச்சு.''

மதில் சுவர் ஓரம் வரிசையாய் ஏழெட்டுத் தென்னை மரங்கள் நேராகவும், நன்றாகவும் வளர்ந்திருக்க, ஒரே ஒரு மரம் மட்டும் கோணல் மாணலாக வளைந்து முறுக்கிக் கொண்டு மதில் சுவரையே இடித்துத் தள்ளி விடுவதுபோல் சாய்ந்து நின்றுகொண்டிருந்தது. அந்தக் கோணல் மரத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த வேதமூர்த்தி, ''நல்ல பசும் பாலில் எப்படியோ ஓர் உப்புக்கல் விழுந்து விட்டது; அதனால் பாலும் திரிஞ்சு போச்சு! இதற்கு யாரை, எதைக் குற்றம் சொல்றது? பாலையா, உப்பையா? அல்லது உப்பு விழக் காரணமானதையா? அந்தக் காரணம் எது?... அது ஒன்றா, பலவா?...'' என்று இப்படித் தமக்குள் முணுமுணுத்து வேதனைப் பெருமூச்சு விட்டவாறு, ''இதெல்லாம் இருக்கட்டும் சேது! இப்போ நம் சொந்த விஷயத்துக்கு வருவோம்'' என்று கூறி நிமிர்ந்தார்.

''எனக்கென்று சொந்த விஷயங்கள் எதுவுமில்லை வேது! சொந்த பந்தங்களையெல்லாம் இழந்து ரொம்பக் காலமாகி விட்டது!'' என்று சொல்லி அலட்சியமாகச் சிரித்தார் சேதுபதி.




## அடக்குமுறை

கடுமையான கம்யூனிஸக் கொள்கைகளுக்கு எதிராக சுதந்திர சிந்தனை, கொள்கை ஆகியவற்றைத் தூண்டும் விஷயங்களைத் தேடிப் பிடித்து அழிப்பதில் செக்கோஸ்லாவாகியா போலீஸ் பீரோ தங்கள் வாசலில் மிகத் தீவிரமாய் ஈடுபட்டிருக்கிறது.

கம்யூனிஸப் புரட்சிக்கு எதிர்ப் புரட்சி செய்பவர்கள், வலதுசாரிகள், சந்தர்ப்பவாதிகளாக அவர் கருதும் சிவிலுரிமைக்காரர்கள் ஆகியோர்களின் அழுக்க செக் நாட்டு நூல் நிலையங்களில் அவர்களால் எழுதப்பட்ட புத்தகங்களையெல்லாம் அகற்றும் பணி தொடங்கப்பட்டுள்ளது. 300 செக் ஆசிரியர்களின் நூல்கள் அகற்றப்பட்டுவிட்டன. அவை யாவும் பெட்டிகளில் அடுக்கப்பட்டு, காகிதக் கூழாக்கப்பட்டுப் புதிய காகிதங்களாக்கத் தயாரிக்கப்பட எங்கோ ஒரு இடத்துக்குக் கப்பலில் பயணம் செய்கின்றன. அவை பற்றிய குறிப்பு, தடைபட்டிய நூல் நிலைய காட்லாக் கார்டுகள் யாவும் அழிக்கப்பட்டு வருகின்றன. செக்கோஸ்லாவாகியாவை உருவாக்கிய தந்தை தாமஸ் மஸாரிக், அவருடைய அரசியல் வாரிசு எட்வர்டு பெனஸ் ஆகிய இருவரின் படைப்புக்கள், மற்றும் அவர்களைப் பற்றிய நூல்கள் யாவும் மறைந்து விட்டன! இவை டுபூசெக்கின் வீழ்ச்சியைத் தொடர்ந்து நடைபெறுபவை.

இதில் வேடிக்கை என்னவென்றால், மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகிய கம்யூனிஸப் பிதாக்களின் புத்தகப் படைப்புகளும்கூட செக் நூல் நிலையங்களிலிருந்து அகற்றப்படுகின்றன. காரணம், மேற்கூறப்பட்ட ஆசிரியர்கள் அந்த நூல்களுக்கு முன்னுரை, முகவுரைகளை எழுதியிருப்பதுதான்!

ஆதாரம்: டைம் - தகவல்: கமலா

---

''அப்படியா?'' என்று கேட்டுக் குறும்புப் புன்னகை பூத்த வேதமூர்த்தி, ''இங்கே என் வீட்டில் உன் அருமை மகன் வந்து தங்கி யிருக்கிறானே, உனக்குத் தெரியுமா?'' என்றார் தம்மை மீறிய ஓர் ஆவலுடன்.

''தெரியுமே!'' என்று எவ்வித சலனமுமின்றி அமைதியாகப் பதிலிறுத்தார் சேதுபதி.

''தெரியுமா?'' என்று வியப்பு மிகுதியால் சற்று உரக்கக் கேட்டுவிட்ட வேதமூர்த்தி உடனே குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''எப்படித் தெரியும்?'' என்றார்.

''சில தினங்களுக்கு, நான் தங்கியிருந்த வீட்டின் கீழ்க் குடித்தனக்காரர்களைப் பார்க்கிறதற்காக அவன் வந்திருந்தான்.''

''அவனை உனக்கு உடனே அடையாளம் தெரிஞ்சுக்க முடிஞ்சுதா?''

''முதலில் தெரியலே. பிறகு ஒருவாறு தெரிஞ்சுக்கிட்டேன்.''

''எப்படி?''

''அவனுடைய நண்பன் ஒருத்தன் இருக்கிறான். பேர் திருமலை. இவனோடு கல்லூரியில் படிச்சவனும். அவனைத்தான் இவன் பார்க்க வந்திருந்தான். அந்தப் பிள்ளையாண்டானிடம் மெல்ல விசாரிச்சேன். அவனுக்கு நான்தான் நரகவின் அப்பான்னு தெரியாது. நானும் இதுவரையில் சொல்லிக் கொள்ளலே. அவன் சொன்ன சில விவரங்களிலிருந்து இவன் என் மகன்னு தெரிஞ்சுக்கிட்டேன்.''

''உன்னை நரசு பார்த்தானு?''

''பார்த்திருப்பான்.''

''அடையாளம் தெரியலேயா?''

''தெரிஞ்சிருக்க முடியாது. ஏன்னு, நான் வீட்டை விட்டு வெளியேறினபோது அவனுக்கு ஆறேழு வயசுதான். என் போட்டோவைப் பார்த்திருப்பான். அதிலிருந்து இப்போ என்னை அடையாளம் தெரிஞ்சுக்கிறது கஷ்டம்.''

'வாஸ்தவம்' என்பதுபோல் தலையாட்டிக் கொண்ட வேதமூர்த்தி, ''இப்போ நீ அவனைப் பார்க்க விரும்பறயா?'' என்று கேட்டார்.

''இல்லே!'' என்று ஒருவித வெறுப்புடன் முணுமுணுத்தார் சேதுபதி.

''நேரில் பார்க்க விருப்பமில்லேன்னுலும் தொலைவில் இருந்தாவது பார்க்கிறயா?''

''இப்போ அவன் இந்த வீட்டிலே இல்லேங்கிறது தெரியும். அதைத் தெரிஞ்சுக்கிட்டுத்தான் இங்கே வந்தேன்.''

வியப்பால் வாயடைத்துப் போன வேதமூர்த்தி, ''இது எப்படி உனக்குத் தெரியும்?'' என்று குழறிக் கேட்டார்.

''ப்பூ! இது ஒரு பெரிய காரியமா?''

''ஏன் அவனை நீ பார்க்க மாட்டேங்கிறே?'' என்று மீண்டும் துருவினார் வேதமூர்த்தி.

''அவனுக்கும் அவனுடைய தாய்க்கும் நான் செத்தவனுகவே கடைசிவரை இருந்து விடறதுன்னு முடிவு பண்ணிட்டேன். இதுக்குமேல் இதுபற்றி என்னை எதுவும் கேட்காதே!'' என்று எங்கோ பார்த்தவாறு சொன்ன சேதுபதியின் கண்கள் இலேசாகக் கலங்கின.

இதனால் வேதமூர்த்தியின் மனமும் நைந்து நொதுநொதுத்தது. சற்றைக்குப் பின், ''அப்படீன்னு இங்கே எதற்காக வந்தே? எங்களைப் பார்க்க மட்டும்தானு?'' என்று புன்முறுவலுடன் வினவினார்.

''ஆமாம், வேது! அத்துடன் இன்னொரு காரணத்துக்காகவும் வந்தேன்.''

வேதமூர்த்தி அவரைக் கூர்ந்து பார்த்தார்.

''என் மகள் புஷ்பசுகந்தி இப்போ உன்னுடைய வீட்டில்தானே இருக்கிறுள்?'' என்று ரொம்பச் சாதாரணமாகக் கேட்டார் சேதுபதி.

தூக்கி வாரிப் போட்டாற்போல் நிமிர்ந்த வேதமூர்த்தி, ''அவளைப் பார்க்கிறதுக்காகத்தான் இங்கே வந்தாயா?'' என்று அவசரமாக வினவினர்.

''இல்லே.''

''பின்னே?''

''அழைச்சுக்கிட்டுப் போறதுக்காக!''

இந்த ஒரு பதிலிலிருந்து வேறு எதையெதையோ புரிந்து கொண்டவர் போல், ''ஓகோ!'' என்று மெல்ல இழுத்தார் வேதமூர்த்தி. ''அந்தப் பாக்கியத்தம்மாளிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் கண்டிருந்தபடி, கன்னிகா மடத்துக்குப் போய் உன் மகளை அழைச்சுக்கிட்டு வந்தேன். இப்போ அவள் என் வீட்டிலிருக்கிறுள்.''

'சரிதான்' என்பது மாதிரி மெல்லத் தலையசைத்துக் கொண்டார் சேதுபதி.

''ஆனல் பாக்கியத்தம்மாளுக்கு நான் இன்னும் இந்த விவரத்தைத் தெரிவித்துக் கடிதம் எழுதலே. நாளைக்கு எழுதிப் போடலாம்னு இருக்கிறேன்'' என்றார் வேதமூர்த்தி.

''வேண்டாம்.''

''எதற்கு வேண்டாங்கிறே?''

''அவள் இப்போ மாயவரத்தில் இல்லே. மெட்ராசுக்கு வந்துவிட்டாள். இங்கே வந்து ரெண்டு நாட்களாகுது.''

ஆச்சரிய மிகுதியினல் மேலே ஏதும் கேட்கத் தோன்றாமல் அமைதியாகி விட்டார் வேதமூர்த்தி.

சேதுபதியே மீண்டும் பேச்சை ஆரம்பித்து, ''அதனல்தான் என் மகளை அவளிடம் அழைச்சுப் போய் ஒப்படைச்சுடலாம்னு இங்கே வந்தேன்'' என்றார்.

''அப்படீன்னு நீ மெட்ராசுக்கு வந்து எவ்வளவு காலமாகுது ?''

''கிட்டத்தட்ட ரெண்டு மாசம் இருக்கும்.''

'' இந்த ஏற்பாடுகளைச் செய்யறதுக்காகவேதான் வந்தாயா ?''

''இல்லே. இங்கே வந்த பிறகுதான் அந்த எண்ணம் தோணினது.''

''சரி; அப்புறம் ?''

''தாயையும் மகளையும் இந்த ஊரில் குடி வைச்சுட்டு நாளைக்கே நான் கிளம்பிப் போயிடறது என்கிற திட்டத்தில் இருக்கிறேன்.''

'' எங்கே ?''

'' மன்னிச்சுடு, வேது ! அதைச் சொல்றதுக்கில்லே.'' (தொடரும்)

**மொ**ழிகளில் தலையாய மொழி மௌனம். பார்வையில் பிரதானமான பார்வை உள் பார்வை — இப்பெருண்மையைத் திரையுலகமும் ரசிகர்களும் மெச்சுமாறு புகுத்தியிருக்கிறார்கள் கோஷிஷ் படத்தில்.

கதாநாயகன் — கதாநாயகி இருவரும் ஊமைகள். ஒரு குருடன் அவர்களுக்குத் துணை. கதாநாயகியின் சகோதரன் வில்லன். இவ்வளவுதான் கதை. ஆனால் படம் பார்ப்பவர்களை மெய்சிலிர்க்க வைத்து விடுகிறது.

கதை ஆசிரியர் குல்ஜாரைக் காட்டிலும் இயக்குநர் குல்ஜார் சிறந்து விளங்குகிறார். இயக்குநரையும் சாப்பிட்டு விடுகிறார் சஞ்சீவ் குமார்! ஊமையாக நடித்தே இப்படி உணர்ச்சிகளை அவரால் எப்படிக் கொட்ட முடிந்தது? ஜயாபாதுரியும் அற்புதமாகத் தம் புகழுக்குப் பெருமை சேர்த்துக் கொள்கிறார் இணைந்து நடித்து! நடிப்புத்தானே இந்தப் படத்தில் பிரதானம்!

குருடனாக வரும் ஓம் சிவபுரியும் திறம் படத் தம் பணியைச் செய்திருக்கிறார். கதாநாயகியின் அண்ணன் கானுவாக வரும் அஸ்ரானியும் மெருகேறிய தம் நடிப்பால் மனத்தைத் திருடுகிறார்!

படம் பார்ப்பவர்களைப் படம் பார்க்கிறோம் என்பதையே மறந்து, விழும் குழந்தையைத் தாவி எடுக்கத் தூண்டிய படப் பிடிப்பு பிரமாதம்! அதே போல் இறந்த குழந்தையைக் காட்டுவதைத் தவிர்த்து, பால் புட்டி உடைந்ததாகக் காட்டியது சிறப்பான டைரக்ஷனுக்குச் சான்று.

ஆனால், 'பப்ளிக் டெலிபோன் பூத்'தில் காசு போடாமலே டயல் செய்து இணைப்புத் தந்தார்களே, அது டைரக்ஷன் மறதிக்கு ஓர் எடுத்துக்காட்டு. ஊமைகள் சீழ்க்கை அடித்து மகிழ்ந்தது மனத்தைக் கிளுகிளுக்க வைத்தாலும் "கிளாஸ்" படத்தை 'மாஸ்' ஆக்க முயன்றதற்கு ஒரு சான்று!

ஜப்பானியப் படம் ஒன்று இதற்கு முன்னோடியாக அமைந்தது என்றாலும் உள்ளத்தைத் தொடும் நடிப்பால் சஞ்சீவ் குமாரும் ஜயாபாதுரியும் படத்தைப் பரிமளிக்க வைத்து விட்டார்கள்!

ஓரிரு குறைகள் இருந்தாலும், மனத்துக்கு நிறைவைத் தரும் கோஷிஷ் அதாவது முயற்சி நல்லதொரு முயற்சி, புதியதொரு முயற்சி, பாராட்டுதற்குரிய முயற்சி! — ரா. வீ.






என் அக்காவின் பிள்ளை ஏகாம்பரத்துக்கு வாட்ட சாட்டமான உடல். மீசையும், கருகருவென வளர்ந்திருந்தது. போலீஸ்காரராகப் போவதைத் தவிர வேறு விதியில்லை என்று அரும் பாடுபட்டுத் தள்ளிவிட்டோம். ஏகாம்பரம் ஏட்டு ஏகாம்பரமாக வருவார் என்பது எங்களது நம்பிக்கை. இது ஏகாரத்தின் மீதுள்ள நம்பிக்கை, ஏகாம்பரத்தின் மீதுள்ள நம்பிக்கை இல்லை !

போலீஸ் பயிற்சிப் பள்ளிக்கு அனுப்பி வைத்தோம்.

அங்கு போய்ச் சேர்ந்த மறுவாரம் தொடங்கி, அன்றுடம் 'அருமை மாமா' என்று ஆரம்பித்து எனக்குக் கடிதம் எழுதுவான். ஏதோ ஒரு சிறைச்சாலைக்குள் மாட்டிக் கொண்ட ஆயுள்கைதி போல் தன் உடலை வருத்திப் பயிற்சி பெறுவதிலுள்ள இன்பத்தை எண்ணாமல் அத்தனையும் துன்பமாய் வர்ணித்திருந்தான். தொடங்குங்கால் துன்பமாய்த் தோன்றும் காரியங்கள் யாவும் பிற்றை நாளில் இன்ப மாளிகையின் வெற்றித் தூண்கள் என்பதை அறியாத அறிவிலி இவன்.

உடலை உழைக்காமலும் வருத்தாமலும் மேனி அலுங்காமல் சம்பாதிக்கும் இளைஞர்கள் கூட்டத்தில் இவனும் ஓர் உதவாக்கரை !

பயிற்சிக் காலத்தில் எந்த வேலைக்குப் போனாலும் உடலும் உள்ளமும் வேதனைப் படும். உணவுப் பழக்கமும் தொல்லை தரும். இது இயல்பு. உடற் கஷ்டம், உணவுக் கஷ்டம் இரண்டையும் பொருட்படுத்தாமல் காவல் துறையில் ஒரு தூணாக நிற்கத்தானே



# ஏகாம்பரம் தப்பினார்...

டி. என். சுகி சுப்பிரமணியன்

கஷ்டங்களைப் பற்றி விவரித்து எழுதுவான். கடிதம் அத்தனை ருசிகரமாய் இருக்கும். கஷ்டம் அவனுக்கு எம வேதனையாக இருக்கும்.

டிரில் வாங்கும் அதிகாரிகள் கெடுபிடி—காலையில் விழிப்பது — கசரத் செய்வது இவற்றிலிருந்து தப்புவதற்குப் பயிற்சி மாணவர்கள் நூற்றுக்கு எழுபது பேர் கண்ணீர் விடுவதையும் தான் மிக அதிகமாக வேதனை அடைவதையும் பற்றி எழுதுவான்.

செக்கிழுத்த செம்மல் சிதம்பரம்பிள்ளையை விட, பிஜித் தீவில் கரும்புத் தோட்டத்தில் பிழிபட்ட கூலிகளைவிட, இலங்கை தேயிலைத் தோட்டத்தில் தமிழகத்துக் கூலிகள் ஒரு காலத்தில் பட்ட துன்பங்களைவிட, தான் அதிகமான கஷ்டம் அடைவதுபோன்று எழுதுவான்.

பயிற்சி தருகிறார்கள். இதனை அறியவில்லை இந்த அறிவிலி.

ஒரு நாள்.

அதிகாலை நேரம்.

முன்பனிக் காலம்.

காக்கி உடை, தொப்பி, கனத்த பூட்ஸ் இவற்றோடு கொட்டும் பனியில் முப்பது பயிற்சி மாணவர்கள் டிரில் செய்து கொண்டிருந்தார்கள். பயிற்சி பெற வந்தவர்கள் வியர்வைக் கடலில் குளித்தார்கள். இத்தனைக்கும் பனிக் காலம்.

இவர்கள்தம் முட்டிக்கால் முறிபடக் கசரத் வாங்கினார் உயர்தர அதிகாரி. அவருக்கு ஈவு இரக்கம் இல்லை. அவரோ சற்றே பருத்த உடம்பு. குனிந்து ஒரு குண்டூசியை எடுக்க முடியாத அளவு பருமன். அவர் உயர்

தர அதிகாரி. அவருக்குச் சதா வியர்வை கொட்டும். அவர் டிரில் வாங்க வந்ததும் தமது கைக் கடிகாரத்தைக் கழற்றி வைத்து விட்டு மாணவர்களைச் செக்கில் போட்ட எள்ளாகப் பிழிந்து கொண்டிருப்பார். அவரைக் கண்டாலே அதிநடுக்கம். உருவம் யானை மாதிரி; குரலோ சிம்மக் குரல்.

''அட்டென்ஷன்'' என்றால் மாணவர் உச்சி மீது வானிடிந்து விழுந்ததுபோல் இருக்கும்.

அவரது கைக் கடிகாரம் தரையில் வைத்த இடத்திலிருந்து மாயமாய் மறைந்து விட்டது. அவரோ அதிகாரி; கோபங்கொள்ளாத தந்திரசாலி.



# சிறைச்சாலை சிக்கியது!

''அருமைச் செல்வ மாணவமணிகளே! வருங் காலத்திய காவல்துறை நண்பர்களே! என் காலக் கருவியை உங்களில் எவர் எடுத்தாலும் தயைசெய்து என்னிடம் திருப்பிக்கொடுங்கள். எல்லோரும் கண்ணை மூடிக் கொள்ளுங்கள்.''

அவருக்கு எதிராக வரிசை வரிசையாக நின்ற மாணவர்கள் தங்கள் கண்ணை மூடிக் கொண்டார்கள்.

''கடிகாரத்தை எடுத்தவர் மட்டும் சுட்டு விரலை உயர்த்தினால் போதும். அவரிடமிருந்து அப்புறம் ரகசியமாகக் கடிகாரத்தை வாங்கிக் கொள்ளுகிறேன்.''

எல்லாரும் கண்களை மூடினார்கள். எவரும் சுட்டு விரலை உயர்த்தவில்லை.

மீண்டும் அந்த உயர்தர அதிகாரி பேச ஆரம்பித்தார். ''உங்களை நான் அனுமதித்தால் நீங்களே கண்டுபிடித்து விடுவீர்கள்! பயிற்சிக் காலத்தில் துப்பறியும் கலையையும் நான் ஓரளவு உங்களுக்குப் பயிற்சி செய்தாக வேண்டும். எனக்கு உங்களில் ஒருவர் சவால் விட்டிருக்கிறார். நான் சமாளிக்கிறேன்!'' என்று சொன்னார்.

பயிற்சி மாணவர்கள் முப்பது நபரும் பல் தெரியச் சிரித்தார்கள்.

கடிகாரத்தைப் பதுக்கிய நபர் முன்னும் வந்து தவறுதலை ஒப்புக் கொள்ளவில்லை.

மீண்டும் அவர் தொடங்கினார்.

''என் கடிகாரத்தை யார் எடுத்தார்கள் என்பதை நான் பார்த்து விட்டேன். அவ்வாறு எடுத்ததோடு, அதனைத் தம் தலைக்குள் போட்டுத் தொப்பியால் மறைத்ததையும் பார்த்து விட்டேன். பாவம், அவ்வாறு மறைத்த மாணவர் சிறு தவறு செய்துவிட்டார். தமது தொப்பியைச் சரியாக வைக்காமல் சாய்வாக வைத்துவிட்டார்!'' என்று சொல்லி வாய் மூடுவதற்குள், —

மூன்றும் வரிசையில் நின்ற ஐந்தாவது மாணவர் தமது தொப்பியை நேராக இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்தார். அவரது மனச்சாட்சி தொப்பி சரி வர இல்லை என்று மயங்க வைத்து விட்டது!

மறுகணம் தொப்பியைக் கழற்றச் சொல்லி உள்ளே இருந்த கடிகாரத்தை வரவழைத்தார், பயிற்சி கொடுத்த அதிகாரி.

தொப்பியைக் கழற்றிய நபர் வேறுமில்லை. என் அக்காள் மகன் ஏகாம்பரம்! வருங் காலத்தில் ஏட்டாக வருவான் என்று நாங்கள் கனாக் கண்ட ஏகாம்பரம்!

அவனைப் பயிற்சிப் பள்ளியிலிருந்து பெருந்தன்மையுடன் வீட்டுக்கு அனுப்பி விட்டனர். தண்டனையோ குற்றச் சாட்டு இதழோ கொடுக்காமல் மன்னித்தும் விட்டார்கள். தலை பிழைத்தது என்று தொப்பியையும், காக்கி உடையையும், கனத்த பூட்சையும் குறுந் தடியையும் களைந்து வீசிவிட்டு வீசின கையும் வெறுங் கையுமாக வந்து நின்றான்.

நான் விசுவரூபம் எடுத்தேன். என் சொற்களில் குத்தீட்டியும் தீப் பிழம்பும் பறந்தன.

''ஏண்டா போயும் போயும் போலீஸ் அதிகாரியின் கைக் கடிகாரத்தைத் திருடினாய்? சிறைச்சாலை பயிற்சிக்கு அனுப்பாமல் மன்னித்தார்களே!''

''மாமா! அவர்கள் தந்த பயிற்சி என் உடலுக்கு ஒத்துக் கொள்ளவில்லை; அவர்கள் போட்ட உணவு என் குடலுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. என் மனம் கெஞ்சியது. அங்கிருந்து விடுபட வழி என்னவென்று யோசித்தேன். அதிகாரியின் கைக்கடிகாரம் எனக்கு விடுதலை வாங்கித் தந்தது!'' என்றான் ஏகாம்பரம்.

வேலையின்றி வீட்டுக்கு வந்தவன் ஏதோ ஒரு வேலையைத் தேடினான். இரவுக் கல்லூரியில் கற்றான். இப்போது அவன் வேலையும் தேடிக் கொண்டான்.

என்ன வேலை தெரியுமோ ?

தென்னாட்டிலுள்ள சிறைச்சாலைகளுக்கெல்லாம் உணவு சப்ளை - உடை சப்ளை - வெள்ளையடித்தல், கட்டடம் கட்டல் போன்ற சிறுசிறு கண்டிராக்ட் வேலைகள் எடுக்கும் பழக்கத்துக்கு வந்துவிட்டான். சிறைச்சாலை அவனை விட்டு விட்டாலும் அவன் சிறைச்சாலையை விட்டானில்லை!




“ ‘கம்யூனிஸ்ட்டுகளுக்கு மதத்தில் நம்பிக்கை கிடையாது. ‘அவர்களுக்குக் கடவுள் இல்லை. எனவே, சோவியத் நாட்டிலும் யாரும் கடவுளை நம்புவது இல்லை. அப்படி யாராவது நம்ப விரும்பினால்கூட அதனை அரசாங்கம் அனுமதிக்காது. அங்கு மத சுதந்திரம், வழிபாட்டுச் சுதந்திரம் கிடையாது’ என்றெல்லாம் பல ஆஸ்திகர்களும், சோவியத் எதிர்ப்பாளர்களும் பேச நான் கேட்டிருக்கிறேன். ஆனால் அந்நாட்டுக்குச் சென்று அந்நாட்டு மக்களுக்கிடையில் ஐந்தாண்டுகள் வாழ்ந்த எனக்கு மேற்சொன்ன கூற்று எவ்வளவு தவறானது என்று தெரிய வந்தது.

“அரசும் மத நிறுவனங்களும் தனித் தனியானவை. அரச நிர்வாகத்தில், மதம் எவ்விதத்திலும் குறுக்கிட முடியாது. மத நம்பிக்கை உள்ளவர்களையும், அற்றவர்களையும் அரசு சமமாகப் பாவிக்கிறது.

“மக்களின் கல்வியறிவு வளர்ந்தால், அவர்களிடம் மூட நம்பிக்கைகள் தானாகவே மறைந்துவிடும் என்பதைச் சோவியத் அரசு நன்கு உணர்ந்திருக்கிறது.

“சோவியத் அரசியல் சட்டப்படி மத நம்பிக்கை அற்றவர்கள், ஆஸ்திகர்களை அவமதிப்பதோ, மனம் நோகும்படி நடந்துகொள்வதோ குற்றமாகும். ஆனால் தனது கருத்துக்களை எடுத்துக் கூற அனைவருக்கும் உரிமை உண்டு.”

மேலே உள்ளது, “சோவியத் மக்களும் மதமும்” என்ற கட்டுரையில் ஒரு பகுதியாகும். இதை எழுதியவர், வி. எஸ். கமலா எம். ஏ. (மொழியியல், மாஸ்கோ நட்புறவுப் பல்கலைக் கழகம்).


“ஏண்டா! நாய்க்குட்டிக்கு நான் வாங்கி வைச்ச பிஸ்கட்டையெல்லாம் நீ தின்னுட்டியாமே?”

கடவுள் சித்தாந்தத்தை எதிர்க்கும் சோவியத் நாட்டில்கூட ஆஸ்திகர்களின் மனத்தைப் புண்படுத்துதல் குற்றமாகக் கருதப்படுகிறது. ஆனால் மதத்தையே ஆதாரமாகக் கொண்ட நமது நாட்டில், சேலம், மதுரை போன்ற நகர்களில் காட்டுமிராண்டித்தனமான, அநாகரிகமான காரியங்களினால் மக்கள் மனம் புண்படுத்தப்பட்டுள்ளது. இவர்களின் மேல் நமது மதச் சார்பற்ற (ஆனால் மதப் பற்றுள்ள) அரசாங்கம் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. வெட்கக்கேடு!

மதுரை
15–10–73 ஆர். கோபால்சாமி

சென்ற 8–10–73 அன்று வானொலியில் ‘பத்திரிகைகளில் பாலுணர்ச்சி’ என்ற தலைப்பில் கல்லூரி மாணவ மாணவியர் சிலர் பங்கு பெற்ற கலந்துரையாடல் ஒன்று நடைபெற்றது. பல வார ஏடுகளின் கதைகள் மாணவ, மாணவிகளின் பலத்த கண்டனத்தைப் பெற்றன. அவர்களின் கண்டனக் கணைகளிலிருந்து தப்பிய ஒரே வார ஏடு கல்கிதான். இளைஞர் சமுதாயம் பெருமைப்படத் தக்க வகையில் அன்றிலிருந்து இன்று வரை ஒரே நிலையிலும், தரமாகவும் வெளியாகும் ஏடு கல்கி என்பதில் அதன் வாசகர்கள் பெருமைப்படுகிறோம்.

மேலப்பாலையூர்
11–10–73 ஆர். வி. கிரி

நமது கல்விப் பணியின் மூலம் சிறப்பெய்திய காலஞ்சென்ற ஆர். நடராஜய்யர் இடையாற்றுமங்கலத்தில் பிறந்தவர். 7–10–73 இதழில் இளையாத்தங்குடி அந்தப் பெருமையைத் தட்டிக் கொண்டு போய் விட்டதே!

தஞ்சாவூர்
14–10–73 கே. எஸ். மணியன்

கடந்த 1–10–73 தேதியன்று நான் இராமேசுவரம் சென்றிருந்தேன். சுவாமியைத் தரிசித்துவிட்டு உடன் மாலையே ஊர் திரும்புவது என்று தீர்மானித்திருந்தேன். அன்றைய தினம் அமைச்சர் கண்ணப்பன் அவர்களும், அமைச்சர் மாதவன் அவர்களும் இராமேசுவரம் கோயிலுக்கு விஜயம் செய்தார்கள். அவர்கள் வந்து போகும் வரையில் பக்தர் ஒருவரையும் கோயில் உள்ளே இருக்கும் இருபத்திரண்டு தீர்த்தங்களிலும் தீர்த்தமாட அனுமதிக்கவில்லை. அன்று மாலையே ஊர் திரும்ப வேண்டியிருந்ததால் நானும் மற்றும் பல பக்தர்களும் தீர்த்தமாடாமலே சுவாமியைத் தரிசித்துவிட்டு ஊர் திரும்பினோம். இராமேசுவரம் சென்றும் தீர்த்தமாடாமல் வந்தது எனக்கு மன நிறைவைத் தரவில்லை. ஏன் பக்தர்களைத் தீர்த்தமாட அனுமதிக்கவில்லை என்று விளங்கவில்லை. இனிமேலாவது பக்தர்களுக்கு இந்தக் குறை ஏற்படாமல் செய்யுமாறு சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கேட்டுக் கொள்கிறேன்.

சிவகாசி
3–10–73 ஏ. ராமராஜ்

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# சில்விக்ரீட் உபயோகித்து

# உங்கள் இல்லத்தை அலங்கரியுங்கள்

# ஏசிசியின் வெள்ளை சிமெண்டு.

ஒரு கருத்து தெரிவியுங்கள். சுவரை அழகுப்படுத்தல். எழில் கொஞ்சும் பூத்தொட்டி டிசைன் அமைத்தல். உங்கள் வரவேற்பு அறையில் டெர்ரசோ தளவரிசை இடல் மற்றும் காங்க்ரீட் ஜாலி வேலை செய்தல். நீங்கள் விரும்பும் எவ்வித வண்ண வேலைக்கும் உகந்த ஏசிசி யின் சில்விக்ரீட் வெள்ளை சிமெண்டு.

உங்களுடைய தேவைகளுக்கு அணுகவும் :
அருகமைந்த சிமெண்ட் மார்க்கெட்டிங் டிவிஷன் ஆஃப்
தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்.
அல்லது அவர்களுடைய விநியோகஸ்தர்கள்.

**தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்**

ஸ்னோஸெம், கலர்க்ரீட் முதலிய தயாரிப்புகளில் உபயோகப்படுத்தப்படும் மூலப்பொருள் சில்விக்ரீட்.



maa. ACC 2203 A-TAM.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka ஸ்ரீலங்காவில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)